## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | முப்பெருந் தேவியர் |
| நூல் வகை | : | வெண்பாத் தொகுப்பு |
| ஆசிரியர் | : | கிரேஸி மோகன் |
| உரிமை | : | ஆசிரியருக்கே |
| முதற்பதிப்பு | : | டிசம்பர் 2019 |
| அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 77 பக்கங்கள் |
| எழுத்து | : | 15 புள்ளிகள் |
| அச்சகம் | : | கரங்கள் பதிப்பகம்,<br>68/1அ, எம்.ஜீ.ஆர் நகர்<br>விரிவாக்கம், சிட்கோ அஞ்சல்,<br>கோவை – 641021<br>செல் : 97503 72227 |
| அட்டை | : | ஓவியர் மணியம் செல்வன். |
| வெளியீடு | : | வானவில் பண்பாட்டு மையம் |

# பதிப்புரை

எங்கள் ஆருயிர் நண்பரும் நாடறிந்த நாடக திரையுலக மேதையுமான அமரர் திரு கிரேஸி மோகன் அவர்கள் எழுதிய 'முப்பெருந் தேவியர்' என்னும் இந்த நூலை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம்.

கிரேஸி மோகன் அயர்வறியா உழைப்பாளி. அவருடைய உழைப்பு எழுத்தில் என்று அறிந்து கொண்டதும் அவர் எழுதிக் குவித்த வார்த்தைகளுக்கு எல்லையே கிடையாது. அதிலும் குறிப்பாக வெண்பா, மோகனுக்கு மிகவும் நெருக்கமான கவிதை வடிவம். அதன் ஓசை லாவகம் கைவரப் பெற்ற மோகன், பல அற்புதமாக வெண்பாக்களை எழுதியிருக்கிறார்.

கண்ணன் அனுபூதி, மீனாட்சி திருக்கல்யாணம், குமார சம்பவம், ரமணாயணம் என்று அவர் வெண்பாவில் தொட்டுப் பார்க்காத விஷயமே இருக்க முடியாது. அதுபோக தம்முடைய ஒவ்வொரு நாடகத்தின் தொடக்க த்திலும் வேண்டுதல் வெண்பா எழுதுவதையும் வழக்கமாக வைத்திருந்தார். அவர் சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி என்ற முப்பெருந் தேவியரின் பேரில் முந்நூறு வெண்பாக்களை எழுதினார். அதனை நெடுநாள் பத்திரப்படுத்தி வைத்திருந்த கிரேஸி மோகனின் இலக்கிய குருவும், நண்பருமான, ஓவியக் கவிஞர் சு.ரவி அவர்கள் அந்த வெண்பாக்களைத் தொகுத்து, பிழைதிருத்தி அற்புதமான புத்தகமாக வெளிக்கொணர ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்.

உடன், கிரேஸி மோகனின் பால்ய நண்பர் ஓவியர் திரு மணியம் செல்வன் அவர்களும் முகப்பு மற்றும் உட்பக்க ஓவியங்களைக் கொடுத்திருக்கிறார். எங்கள் நண்பர்கள் சேர்ந்து செய்திருக்கும் இம்முயற்சி, 'வானவில் பண்பாட்டு மையம்' மூலமாக வெளியாவது எங்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது.

**-வானவில் பண்பாட்டு மையம்**
**சென்னை.**




மூச்சு விடுமுன்பே முந்நூறு வெண்பாக்கள்
ஆச்சென்று சொல்லி அசத்தினாய் - பேச்சிழந்தேன்!
வண்ணமிகு நூல்வடிவம் காணாதே நண்பாநீ
விண்ணகமேன் போனாய் விரைந்து?

-சு.ரவி,
பூனா.

## அணிந்துரை

கிரேஸி மோகனுக்கும் எனக்கும் அறிமுகம் ஏற்பட்டதே ஒரு வெண்பா மூலம்தான். வெண்பா எழுதுபவர் யாராயிருந்தாலும் அவர் 'நண்பா' என்று அரவணைத்துக் கொள்வார்.

**வெண்பா எழுத வெறிகொண் டலைந்ததன்**
**பண்பால் விளைந்தநற் பாவெல்லாம் - கண்பார்த்தே**
**முத்தேவி மாரும் முனைப்பாகச் சொன்னாரோ**
**''புத்தேள் உலகுக்குப் போ!''**

''நான் எழுதும் வெண்பாக்களை நீயெழுதும் வெண்பாக்களாக ''உய்யவை, நீதா உயிர்'' என வாணியை வேண்டுகிறார் மோகன். வெண்பா எழுதாத நாளெல்லாம் வீணான நாளாக அவருக்குப் படுகிறது.

**எழுதாத நாளே பழுதான நாளாம்**
**பொழுதென்றும் வெண்பாப் புனைந்து - தொழுதிடச்**
**செய்வாய் சிபாரிசு செவ்வேள் முருகனிடம்**
**எய்வாய் தமிழென்றன் பால்**

என்று சக்தியை வேண்டுகிறார்.

வாணியிடம் ''வெண்டளையில் வீற்றிருக்கும் வாணியே என்ற வெண்பாவாம் தாமரையில் வீற்றிருப்பாய் என வேண்டுகிறார். அத்தோடு வெண்பாக்கள் குற்றம் குறையின்றியும் நீ அருளவேண்டும்'' என வேண்டுகிறார்.

கிரேஸி மோகனுடைய வெண்பாப் பாணி ஒரு புதுப்பாணி என்றுதான் சொல்லவேண்டும். ஆங்கில வார்த்தைகளை வெண்பாவில் நுழைக்கவோ முழுக்க வடமொழிச் சொற்களைக் கொண்டே வெண்பா எழுதவோ அவர் தயங்கியதில்லை. இதோ முற்றிலும் வடமொழியில் எழுதப்பட்ட ஒரு வெண்பா

**ஷ்யாம கிருஷ்ண சகோதரி தக்ஷிண**
**ராம கிருஷ்ண உபாஸினி - நாம**

**சஹஸ்ர சொரூபிணி சாஸ்வத சாக்ஷி**
**ரஹஸ்யசி நேகிதிர க்ஷி!**

அவருக்கு அகத்தூய்மையுடன் புறத்தூய்மையிலும் அதிக ஈடுபாடு இருந்தது என்பது இந்நூலைப் படிக்கும் போது தெளிவாகிறது.

**- சுத்தத்தை**
**வேண்டுவாள் செந்திரு, வாசல் தெளிப்போர்க்கு**
**யாண்டும் வறுமை இல!**

என்றும்

**உத்தம பத்தினியின் உச்சந் தலைவகிட்டில்**
**பத்தும் செயாத பணமுடிப்பில் - சுத்தமாய்ச்**
**சாணத் தெளிப்பில்ஸ்ரீ சூர்ண நுதற்பிறையில்**
**காணலாம் பொன்மகளின் கால்!**

உமையம்மையைச் சிவனின் இடப்பாகத்தில் இருப்பவள் என்று தானே பலரும் சொல்கிறார்கள். ஆனால் கிரேஸி மோகனின் பார்வை சற்று மாறுபட்டிருக்கிறது உமையம்மைக்கு ஏற்றம் கொடுக்கவேண்டி அம்மையின் வலப்பாகத்தில் சி வனிருக்கிறார் என்கிறார்.

**அவனை வலப்புறம் ஏந்திடும்**
**அன்னை இடமே அரண்!**

அன்னை வலமே அரன் என்று சொல்லலாமெனத் தோன்றுகிறது காளமேகத்துக்குத் தாம்பூலம் கொடுத்துக் கவியாக்கினாள் ஆனைக்கா அகிலண்ட நாயகி. ''அம்மா என்னிடமும் வெற்றிலையிருக்கிறது. அதுதான் என் நாக்கு. அதிலுன் தாம்பூலத்தைத் துப்பு'' என்கிறார் மோகன்.

தன்னைக் காக்கவேண்டுமென்று பராசக்தியிடம் என்ன அழகாக வேண்டுகிறார் பாருங்கள்.

**வானைக்கா வையம்கா தூணைத் துரும்பைக்கா**
**மோனை எதுகைக்கா மோஹனைக்கா - ஆனைக்கா**
**ஆத்தா அகிலாண்ட அம்மைபோல் வேறேகாப்**
**பாத்த எவரோ பகர்!**

இலக்குமியிடம் பக்தி கொண்டால் பக்தி தான் செய்கூலி, சேதாரம் கிடையாது. பணப்பை காலி ஆகாது என நகைச் சுவையோடு சொல்கிறார்.

ஒரே வெண்பாவில் கற்பகம், கருமாரி, காளிகாம்பாள், விசாலாக்ஷி, காமாக்ஷி, மீனாக்ஷி ஆகிய தேவியரைக் கொணர்ந்திருப்பது சிறப்பு.

**காப்பாள் கருமாரி, கைகொடுப்பாள் கற்பகம்**
**கோப்பாள் இருவரையும் காளிகாம்பா - வார்ப்பாள்**
**இகமேமீ னாட்சி அகம்விசா லாட்சி**
**சுகம்காஞ்சி காமாட்சி சேர்ந்து.**

இந்த நூலில் கிரேஸி மோகனின் பக்தி வெளிப்பாடு, வெண்பா வித்தகம் ஆகியவற்றைக் கண்கூடாக் காண்கிறோம். வாழ்க அவர்புகழ்!

**-இலந்தை சு. இராமசாமி,**
**சென்னை.**

## வெண்பாவாய் சுவாசித்தவன்

எதைப் பிடித்தாலும் ஒரே பிடியாய்ப் பிடித்துக் கொள்வது மோகனின் தலையாய இயல்பு. அது 'செண்டிமெண்ட் டிஷர்ட்' ஆனாலும் சரி, உலகை வலம் வந்த அழுக்குத் துண்டானாலும் சரி, ஏதோவொன்று தன்னை ஆட்டிப் படைப்பதை அறியாமல் இருப்பதும், அறிந்தாலும் அதிலிருந்து விடுபட முடியாமல் இருப்பதும் அவன் இயல்பு. வெற்றிலை, சீவல், புகையிலையும் அப்படித்தான். வெண்பாவும் அப்படித்தான்.

தினமும் வெண்பா எழுதியே ஆக வேண்டும். இல்லையென்றால் அவனுக்கு withdrawal symptoms வந்துவிடும் என்னும் அளவுக்கு அதில் போதை கொண்டான் அவன். புனேயில் வசிக்கும் நண்பன் சு.ரவிதான் அவனுக்கு யாப்பு ஆசான். ரவியோ அருணகிரியின் திருப்புகழ்போல், ஐயப்பன் மீது அதிசயமான பாடல்கள் பாடியவன். அவன்தான் மோகனுக்கு வெண்பா இலக்கணத்தைக் கற்றுத் தந்திருக்கிறான். ஆனால், வெண்பாவில் தளை தட்டுவதை மோகன் பொருட்படுத்துவதில்லை. 'களை தட்டாமல் இருக்கிறதே போதாதா' என்பான். அவனுடைய 'பஞ்ச் டயலாக்கு'களுக்கு முன்னால் நம் யாப்பு அக்கறை எடுபடுமோ!

மோகனுக்கு வெண்பாப் பித்துத் தலைக்கேறி, அதில் ஆங்கிலச் சொற்களையெல்லாம் அள்ளிப் போட்டு, அதை நியாயப் படுத்துவதற்காக, காளமேகத்தை இழுப்பான். இந்தப் பித்தத்திலிருந்து அவனை மீட்க வேண்டும் என்று ரவியும் நானும் மல்லுக்கு நின்றோம். கொஞ்சம் விருத்தங்கள் எழுதுவான்; ஆனால் ஏதோ பிழைசெய்து விட்டோமென்று தோன்றிவிடும். உடனே ஓடிவந்து வெண்பாவைக் கட்டிக்கொண்டு விடுவான். ஆனால், ரவியின் தயவில், திருமால் மீது அவன் புனைந்திருக்கும் சந்தப் பாடல்கள் அற்புதமானவை. அவனை அதில் ஈடுபடுத்தியதற்காக நான் ரவிக்கு நன்றி சொல்வேன்.

நாடகத்துக்கு முன்னால் 'வேண்டுதல் வெண்பா' எழுதுவது அவனுக்குப் புது வழக்கமானது. யாப்பில் வேறெதையும் விட வெண்பாதான் அவனுக்குச் சுகமாக இருந்தது என்பதை என்னிடம் அவன் ஒரு குழந்தைபோல் சொல்லிப் பகிர்ந்து கொண்டபோது, என் மனம் நெகிழ்ந்தது.

மோகன் ரமணரை வெண்பாவில் பிழிந்து கொடுத்தான். அவனுக்கு 'நான் யார்?' விசாரணையில் ஈடுபாடு வலுத்தபோது அவன் உலகிலிருந்து விடைபெற்றுக் கொண்டான்.

இதோ, அவனுடைய இந்த வெண்பாக்கள் முப்பெரும் தேவியரைப் பற்றியவை. வாணியைப் பணிந்தால் 'தேக்கும் வடிக்குமே தேன்!' என்கிறான்.

பாரதி, வாணி எங்கெங்கெல்லாம் இருக்கிறாள் என்பதைத் தனது 'வெள்ளைக் கமலத்திலே' பாட்டில் சொல்வான். அது போல் மோகனும்,

**'வெண்**
**பூவில் மறையோதும் நான்முகன் - நாவில்**
**தமிழ்க்கவிஞர் ஏட்டில் தவமுனிவர் வாக்கில்**
**அமிழ்தாய்ப் பொழிவாள் அவள்!**

என்று அழகாய்க் காட்டுகிறான்.

'கையில் ஏடு தரித்திருப்பாள்' என்பானே பாரதி, சரஸ்வதியின் கையில் இருக்கும் அந்த ஏடுகள் என்னவாம்? யாரும் சொல்லாத ஒரு சேதியைச் சொல்கிறான் மோகன்:

**உ.வே.சா.**
**என்ற தமிழ்த்தாத்தா கண்டெடுத்த ஏடுகளே**
**மின்னுமவள் கையில் அமர்ந்து!**

இதேபோல, திருமகளைப் பாடும்போதோ, எது செல்வம், எது எதையும் பொன்னாக்கும் மருந்து என்று

எப்படி விளக்குகிறான் பாருங்கள்:

**குறுக்குவழி சென்று குவித்த பணத்தால்**
**சறுக்கு மரச்சரிவில் செல்லும், - கிறுக்குத்**
**தனம்பித்தம், செல்வி திருத்தாள் துதிக்கும்**
**மனம்தான்பொன் செய்யும் மருந்து!**

அந்தத் திருமகள் யாராம்? ''பச்சைமால் மெச்சி அணைக்கும் மின்னற் கொடி''யாம்! என்ன அழகான வர்ணனை!

பொதுவாக, கவிதை வேண்டுமானால் கலைமகளைத்தான் கேட்பது வழக்கம். மோகன், கலைவாணி மீது நூறு வெண்பாக்கள் பாடிவிட்டு, திருமகளிடம் பாடல் தாவென்று கேட்கிறான் 99 ஆவது பாடலில்:

**மாவீரன் பாரதியின் தீவிரம் இல்லாது**
**தீவிரலைத் தீண்டத் தகுமோசொல் - நாவிருந்து**
**தட்டாமல் என்கவிதை நீதருக உன்பார்வை**
**பட்டால் துலங்குமென் பா!**

பேதம் பாராத இந்தப் பார்வைதான் அவனைப் பராசக்தி மீதும் நூறு வெண்பாக்கள் எழுத வைத்தது. இதில் ஆறாவது வெண்பா விசித்திரமானது. பூதங்கள் எத்தனை? 'அட இதுகூடத் தெரியாதா ஐந்து,' என்பீர்கள். ஆறு என்கிறானே என் நண்பன்! ஆம்,

**வானம்தீ**
**மண்காற்று நீர்காலம் மற்றுள்ள பூதமிவள்**
**முன்தோற்று மண்டியிடு மாம்!**

என்று காலத்தை ஒரு பூதமாக ஆக்கிப் பார்ப்பது கவியுரிமை! மோகனுக்கு ரமணமுனியின் தாக்கம் பூரணமாக இருந்தது. அவன், அவரால் தாக்கப்பட்டான் என்று சொன்னாலும் மிகையாகாது.

ஞமுப்பெரும் தேவியரைப் பாடும்போதும், அதில் ரமணமயம் ரம்மியமாக வாசமிடும்:

***நானார் அறிதல் நமக்கெதற் கன்னையே***
***நீயார் உணர்தலே நற்கதி - தாயார்***
***மகனைத் தொலைப்பாளா? மாதா தவித்தேன்***
***அகலா திருப்பாய் அணைத்து!***

என்று 'நானார்?' விசாரணைக்கே ஒரு புதிய பரிமாணத்தைத் தருகிறான். ஒருபொது மேடையில், மோகனின் தம்பி பாலாஜியிடம், மோகனின் எழுத்துக்களை வெளிக்கொணர வேண்டும் என்றும், அதற்கு நண்பர்கள் ஆவன செய்வோமென்றும் கோரிக்கை வைத்தேன். பலமாகத் தலையசைத்தான் பாலாஜி, இந்த நூல் வெளிவருவதைப் பார்க்கும்போது, இன்னும் மோகனின் படைப்புகள் வெளிவரும் என்னும் நம்பிக்கை ஏற்படுகிறது.

***நண்பன் பறந்துவிட்டான் நற்றமிழ்த் தேன்மணக்கும்***
***வெண்பா விருந்தொன்றை வைத்தான் விதம்விதமாய்***
***பண்பாளன் அன்புடையோன் பாசமுள்ளோன், தான்வடித்த***
***வெண்பாவில் வாழ்வான் விரிந்து!***

**-இசைக்கவி ரமணன்,**
**சென்னை.**

# முப்பெரும் தேவியர்

காப்பு

நாமகளே, தண்பொழிலில் வெண்டா மரையமர்ந்த
பூமகளே நின்மேல் ஒருநூறு - பாமலரப்
பிள்ளையென் வாக்கினில் பீடுடைய செந்தமிழ்க்
கள்ளூறச் செய்தல் கடன்!

நூல்

வெண்பூ அமர்ந்திருக்கும் வேத விலாஸினியை
வெண்பாவில் பாட விழைகின்றேன் - கண்வீச்சின்
கூறொன்றால் இந்தக் கடையேனின் வாக்கினிலே
ஆறாய்ப் பெருக அருள்! (1)

நாணல் இடையாளாம், நாவீ றுடையாளாம்
பூணல் அயன்மணந்த புண்ணியளாம் - வீணில்
அலையாதே நெஞ்சே அறுபத்தி நான்கு
கலையாளைப் பாடக் கவி! (2)

நாக்கில் நரம்பின்றி நாளும் வசைபாடி
தீக்குள் குளிர்காயா தேநெஞ்சே -வாக்கில்
கலைவாணி வந்து குடியேறும் வண்ணம்
அலைபாய்ந் திடாமல் அடங்கு! (3)

ரவியுடன் சுற்றி ரகசியங்கள் கற்ற
கவிஅனுமன் கானம் குளிரப் - புவிமிசை
பாயப் பொழிவாள் படிக நிறத்தாள்
ஆய கலையாள் அருள்! (4)

## கிரேஸி மோகன்

*வந்தனம் செய்ய வரமளிக்கும் வாணியால்*
*மந்தனும் ஆவானே மாகவி - சிந்தையும்*
*வாக்கும் செயலுமவள் போக்கே துதித்திடத்*
*தேக்கும் வடிக்குமே தேன்!* (5)

*பலகலைக்கு ஞானி பயில்வோர்க்குத் தோணி*
*தளைதப்பாத் தீந்தமிழின் தேனீ - நிலைகுலைந்து*
*நான்நீ எனப்பேசும் நாநீ நுழையாயே*
*வாநீஎன் வாக்தே வதே!* (6)

*தேஜ சொரூபிணீ! தேவி சரஸ்வதி!*
*ராஜ ஷியாமளா! ரக்ஷிநீ! -பூஜை*
*புனஸ்காரம் என்றன் நமஸ்காரம் தாயே!*
*மனக்கிலேசம் நீக்கியெனை மீட்டு!* (7)

*வேதங்கள் நான்குமுன் காதணியும் குண்டலம்*
*நாதப் பரப்பிரமம் நின்வாசி - ஓதும்*
*புராணங்கள் மேகலை பாதச் சிலம்பு*
*சராசரங்கள் சேரும் சபை!* (8)

*கட்டளை போடு கலித்துறைக்குப் பாரதி*
*கட்டளை கோப்பெனக்குக் கைவர - வெட்டவெளி*
*வெண்பா களித்துறையில் வாழவைத்த வாணியே*
*என்பால் கலித்துறைக்கேன் ஏய்ப்பு!* (9)

## முப்பெரும் தேவியர்

*சகலகலா வல்லி அகலாதென் வாக்கில்
பகலிரவாய்க் கொள்வாயே பள்ளி - புகலவரும்
வெண்பாவாம் வாரிசத்தில் வந்தமர்ந்து நின்புகழைப்
பெண்பாவாய் பாடிப் பற!* (10)

*நவையூறும் நாவில் சுவையூறச் செய்தே
அவையேறும் வாழ்வை அளிப்பாய் - இவையாவும்
பெற்றிட வெண்பாக்கள் குற்றம் குறையின்றிச்
சொற்றுளியைச் சீராய்ச் செதுக்கு!* (11)

*மட்டொழுகும் வெண்கமலம் மீதில் தனிவெண்மைப்
பட்டிழையச் சிற்றிடையில் போயமர்ந்து - மொட்டிதழால்
ஆய கலைகளை ஆன்றோர்க் கறிவிக்கும்
தாயே எனக்குமவை தா!* (12)

*சவ்வாது சந்தனம் சத்தியம் அவள்வாக்குக்
கொவ்வாத வாச உபமானம் - இவ்வாத
உண்மை உணர்ந்தகம்பன் ஓதினன் அந்தாதி
அம்மை சரஸ்வதிமேல் அன்று!* (13)

*வேதம் உபநிடதம் வித்தைகள் எண்ணெண்ணும்
பாதம் விளையாடும் பிள்ளைகள் - மாதம்மும்
மாரியும் பெய்தலாய் மாண்புமிகு கல்வியதி
காரியின்கண் பார்க்கக் கவி!* (14)

# கிரேஸி மோகன்

*காமுறுவாள் கற்போர்மேல் கைகொடுக்கக் கற்பகமாய்*
*நாமருவி நூற்சேலை நெய்திடுவாள் - பூமருவும்*
*வாவிவளர் கூத்தனூர் தேவி சரஸ்வதி*
*தாவி அளிப்பாள் தமிழ்!* (15)

*தூமியென்ற கம்பன் தவறில்லை என்று*
*சமயத்தில் செய்தாள் சகாயம் - தமிழென்ற*
*ஆய்ச்சியாய் வந்தன்று பேச்சு வழக்காக்கக்*
*கூச்சலிட்ட கூத்தன் களைப்பு!* (16)

*காளிதாச கம்ப குமர குருபரர்கள்*
*தோளிலங்க வஸ்த்திரமாய்த் துள்ளிடுவோய் - தாளிரண்டில்*
*கைகட்டிக் கேட்கின்றேன் பொய்க்கெட்டா புத்தியை*
*மைவிழியே கொஞ்சம் வழங்கு!* (17)

*படிகமணி மாலை படிப்புணர்த்தும் ஓலை*
*மடிதவழும் வீணை, கரத்தில் - கடிகமழ்ப்பூ*
*வீற்றிருக்கும் விந்த்யவி லாஸினியை வேண்டச்சொல்*
*ஆற்றுப் பெருக்காய் வரும்!* (18)

*வர்மன் வரைந்தாற்போல் வாரிசத்தில் வீற்றிருந்து*
*தர்மம் தவம்தானம் தேர்ந்திடக் - கர்மமாய்*
*மோனத்தில் மூழ்கி முனையும் மஹாசக்தி*
*ஞானத்தில் நானுற நல்கு!* (19)

## முப்பெரும் தேவியர்

*புத்தகம், முத்துமணி, பக்கயிரு கைபற்ற*
*மத்தயிரு கையால் மடியேந்தும் - சித்திர*
*யாழினை மீட்டிடும் ஏழிசைச் செல்வியே*
*வாழிய வாழிய வே!* *(20)*

*கல்வி துணைவரும் செல்வம் உதவிடும்*
*வல்லமை வீரம் வணங்கிடும் - செல்வி*
*கலைவாணி யாலுன் கவுரவம் கூடும்*
*தலைவானில் நிற்கும் திமிர்ந்து!* *(21)*

*வேறெதையும் எண்ணாது வேண்டி வணங்கிடுவாய்*
*சாரதையை நம்பி சிருங்கேரி - ஊரதனில்*
*பாரதன்பின் வாழ்வு பரிசுத்தம் ஆகிடும்*
*பாரதன்பின் பார்க்கப் பளிங்கு!* *(22)*

*துங்கா நதிக்கரைசத் சங்கம் சிருங்கேரி*
*சிங்கா சனத்திருக்கும் சாரதே - சங்காய்க்*
*கிடக்கின்றேன் சும்மா, எடுத்தூதி அம்மா*
*நடத்தெனது நாடகத்தை நன்கு!* *(23)*

*சங்கரன் முன்செல்ல சாரதை பின்செல்ல*
*துங்கையின் தீரத்தில் தேவியின்ச - தங்கையின்*
*சத்தம் குறைந்திட சத்குரு பார்த்திட*
*வித்தை சிருங்கேரி வாய்த்து!* *(24)*

## கிரேஸி மோகன்

கர்ப்ப நுணல்மேல் குடையாய்ப் படம்பிடிக்கும்
சர்ப்ப சகாய சிருங்கேரி - கர்ப்ப
கிரகத்து சாரதையைக் கும்பிடுவோர் முன்பு
கிரகங்கள் கூப்பும் கரம்! *(25)*

வித்தை, வினயம், விசாரம், விவேகமிவை
மொத்தமுமென் நெஞ்சில் முகிழ்த்திட - ஸ்ரத்தை
அளித்திடு சாரதா அம்பிகே, என்னுள்
முளைத்திடு முண்டக மாய்! *(26)*

உளம்கொடுக்கும் உன்ன, உரம்கொடுக்கும் நண்ணக்
களம்கொடுத்து ஞானக் கொழுந்தாய்ப் - புலன்மடக்கி
ஆசை அறுத்தான்ம பூசைக்குச் சாரதை
ஓசைச் சதங்கையொலி ஓம்! *(27)*

நையப் புடைப்பாள் நமதகந்தை போக்கிட
ஐயம் அகன்றதும் ஆதரவாய் - கையைப்
பிடித்திழுத்துச் செல்வாள் பரமசுகம் கூட்டப்
படித்ததெலாம் பெண்ணிவளால் பார்! *(28)*

கானாம் ருதத்திலே கம்பன் கவிதையிலே
நானார் விளக்கநூல் நாற்பதிலே - மூணாறில்
எண்ணும் எழுத்துமாய் எங்கும் இருப்பவளை
எண்ணல் அயன்கை எழுத்து! *(29)*

## முப்பெரும் தேவியர்

*தேவி சரஸ்வதி வாசம் புரிவாள்வெண்*
*பூவில் மறையோதும் நான்முகன் - நாவில்*
*தமிழ்க்கவிஞர் ஏட்டில் தவமுனிவர் வாக்கில்*
*அமிழ்தாய்ப் பொழிவாள் அவள்!* *(30)*

*எண்ணமவள் எண்ணும் எழுத்துமவள் இன்றுநாம்*
*பண்ணும் செயலவள் பின்நாளை - கண்ணும்*
*கருத்துமாய்க் காக்கும் கலைவாணி என்னும்*
*ஒருத்தியை உள்ளிருத்தி வை!* *(31)*

*கீரன் திருமுரு காற்றுப் படையவள்*
*மாறன் திருவாய் மொழியவள் - கூறும்*
*இலக்கியம் யாவும் இவள்வடிவில்; ஆங்கே*
*இலக்காய் இருப்பாள் இவள்!* *(32)*

*வண்டுவந்து மொய்க்கா வரைந்த மலர்சோலை*
*கொண்டவர்மன் ஓவியத்தில் கால்மடித்து - முண்டகத்தின்*
*மெல்லிதழில், அன்னம் மிதக்கும் தடாகத்தில்*
*நல்கிடுவாள் யாழில் நலம்!* *(33)*

*என்பிழைகள் ஏராளம் என்றாலும் அன்னையே*
*புன்மொழியேன் என்னைப் பொறுத்தருள்வாய் - உன்விழியால்*
*கூட்டு தமிழைக் கவிபாடும் ஆற்றலை*
*ஏட்டுச் சுரைக்காய் எனக்கு!* *(34)*

*பாக்கு பழமிலை பூக்கள் பணிவெதிர்*
*பார்ப்பாள் பராசக்தி; பாரதி - வாக்கில்*
*வினயமுடன் வித்தை விரும்புவோர் தம்மை*
*தனயனென ஏற்பாள் தனக்கு!* *(35)*

*வேசிவரக் காத்த வரதனை ஓர்நொடியில்*
*ஆசுகவி ஆக்கிய ஆனைக்கா - ஆசிகையே*
*காளமேகம் கைக்கெட்டி வாய்க்கெட் டியவாணி*
*மூளயோகம் என்வாய்க்கும் மூட்டு!* *(36)*

*பாத்தநூறு தெய்வத்தில் பாரதியைப் போலிங்குக்*
*காத்திருக்க வைக்கா கடவுளெது - கூத்தனூர்*
*தேவி மனம்வைத்தால் தேளின் கொடுக்கிலும்*
*காவியம் கொட்டும் களிப்பு!* *(37)*

*சாத்திரங்கள் வேதங்கள் கூத்தனூர் தேவியின்*
*நேத்திரத் துத்தீர நுண்ணிமைகள் - பாத்திரம்*
*கண்டவள் பார்வை கருணையொடு போடுமே*
*பண்டிதன் என்னும் பதம்!* *(38)*

*பண்டித வன்புலிக்குப் பாமரத் தோல்போர்த்தும்*
*மண்டைக் கனத்தில் மிதக்குங்கால் - எண்ணில்*
*நுனிக்கிளை உட்கார்ந் தடிக்கிளை சாய்த்தான்*
*தனிக்கவியாய்த் தானுயர்ந் தான்!* *(39)*

## முப்பெரும் தேவியர்

*வேதமுனி சொன்னது வேழம் தொகுத்தது*
*கீதையைக் கண்ணன் கொடுத்ததென் - றேதுமே*
*வெற்றிக்குப் பின்னிருந்த பெண்ணந்த வாணியே*
*முற்றுமவள் ஆசியெனத் தேர்!* *(40)*

*கூனியின் சூழ்ச்சியும் கைகேயி வீழ்ச்சியும்*
*மானி இராமன் முதிர்ச்சியும் - தோணி*
*குகனின் நெகிழ்ச்சியும் குன்றனைய வாயு*
*மகனனுமன் வாக்குமவள் மாண்பு!* *(41)*

*தாவித் திரியும்பெண் மான்போல் விழியுடையாள்*
*சாவித் திரியை சவிதாவை - சேவித்தால்*
*சித்தத் திடலிடையே சீரிளமை யோடென்றும்*
*தத்தித் தவழும் தமிழ்!* *(42)*

*காயத் திரியும் கதிரை வசமாக்கும்*
*காயத் திரியும் அவளேகாண் - மாயத்*
*திரைவிலக மெய்ஞானச் சூரியன் தோன்ற*
*உரைப்பாய் நூறுமுறை உள்!* *(43)*

*நாவேசி னாலும் பொறுமை இழக்காமல்*
*ஆவேசம் சற்றும் குறையாமல் - உ.வே.சா.*
*என்ற தமிழ்த்தாத்தா கண்டெடுத்த ஏடுகளே*
*மின்னுமவள் கையில் அமர்ந்து!* *(44)*

## கிரேஸி மோகன்

*செல்வம் நிலையல்ல தேகம் சதமல்ல*
*கல்வி அழியாது; காப்பாற்றும் - நல்விதமாய்*
*நான்முகன் நாவில் குடிகொண்ட நாயகியைத்*
*தேன்மலராள் தேவிபதம் தேடு!* *(45)*

*கம்பன் கவிசெய்தான்; ஞான குருபரன்*
*கும்பிட்டுப் பாடினான்; பாரதியோ - கம்பீர*
*மாகத் துதித்தான்; மாதரசி தான்கொடுத்தாள்*
*தாகம் தணிக்கும் தமிழ்!* *(46)*

*திக்குவாய் நீங்கித் தெளிவான வாக்குவரும்;*
*மக்குபோய் ஆளும் மகாசபை - சிக்கலான*
*சாத்திரங்கள் கற்பதுவும் சாத்தியமாம், வேதவல்லி*
*நேத்திரங்கள் நின்மேல் பட!* *(47)*

*கற்றதனால் ஆயபயன் நற்றமிழாள் நல்லுறவைப்*
*பெற்றதே போதுமென்ற போதமாம் - மற்றதெலாம்*
*செந்திருவால் செல்வமும் சங்கரியால் வீரமும்*
*வந்திடும்பார் வாணி வழி!* *(48)*

*போகத்தில் விந்து புகுமுன் புகுந்தங்கு*
*மோகச் சினைமுட்டை மூளையை - வேகவைத்துப்*
*பாமரனா, அன்றிந்தப் பார்போற்றும் பண்டிதனா*
*தாமரையாள் தந்திடுவாள் தீர்ப்பு!* *(49)*

## முப்பெரும் தேவியர்

*உச்சிக் குடுமியை ஊடாடும் பூணலை*
*மெச்சிடும் ஆசார மேன்மையைத் - துச்சமாய்*
*எண்ணும் கலைவாணி ஏற்பாள் வினயத்தை*
*கண்ணின் மணியாய்க் களித்து!* *(50)*

*வீணை படிகமணி வேதக் கரத்தளை*
*மோனை எதுகை அணிபூண்டு - சேனைக்*
*கலைகள்எண் ணென்சூழ வெண்டா மரையில்*
*விளையும்வெண் பூவை வணங்கு!* *(51)*

*பத்தரைப் பொன்னில் பதினாறாம் யவ்வனத்தில்*
*முத்திறைக்கும் சேயின் முறுவலில் - சித்திரையில்,*
*புத்தரின் மோனத்தில், புண்ணிய தீர்த்தத்தில்*
*இத்தரைதர் மத்தில் இவள்!* *(52)*

*காசியில் கங்கையில், ஆசியில், ஆண்மையில்*
*வாசி அடக்கும் விளையாட்டில் - பூசித்துப்*
*பூசிடும் வெண்ணீற்றில், ஹாசிய நாடகத்தில்*
*ஆ!சிரி யப்பா அவள்!* *(53)*

*மூலத் துறங்கி முனைப்பிற் கிளர்ந்தெழும்*
*கோலக் குமிழ்சிரிப்பாள் கூடவர - ஞாலத்தில்*
*குண்டலினி யோகமது கூடிவரும் வித்தையெலாம்*
*மண்டலிக்கும் பார்பன் மடங்கு!* *(54)*

*ஈரெட்டும் ஆறெட்டும் ஈன்றவள், நான்மறையைச்*
*சீராட்ட வந்த செவிலித்தாய் - பாரேட்டுப்*
*பாக்கள் பதிகங்கள் பாசுரங்கள் யாவையும்*
*ஆக்கி அளிப்பாள் அவள்!* *(55)*

*அஞ்சிலே சம்பந்தர்க் காரா அமுதளித்துப்*
*பிஞ்சிலே பாடவைத்த தேவிக்கு - வெஞ்சமரில்*
*மந்த்ரிணி ஆனவளே மாமதுரை மீனாளின்*
*அந்தர்யா மீஎன் றறி!* *(56)*

*பொற்றா மரைக்குளமே, போட்ட பதிகமெலாம்*
*சற்றும் முழுகாது சேர்த்தவளே - கொற்றவை*
*மீனாட்சி பிள்ளைத் தமிழ்பாடும் பிள்ளைசொல்*
*தேனாட்சி செய்யும்தே வீ!* *(57)*

*எண்ணெண் கலைகளை ஏழு சுரங்களில்*
*பண்ணென யாழில் பயின்றிடும் - அன்னத்து*
*வாகனன் பத்தினி வெண்டா மரைவாணி*
*மோகனென் வாக்கில் முகிழ்!* *(58)*

*வேதயிதி ஹாசபு ராண உபநிடதம்*
*யாதுமுன் மூச்சில் இழையும்சங் - கீதமாம்*
*கோத்த படிகமாலை யோடுகூத்த னூர்வாழும்*
*ஆத்தாளே ஆசுகவி ஆக்கு!* *(59)*

# முப்பெரும் தேவியர்

*வித்தை சிறக்க விளைவுகள் மேன்மையுறச்*
*சித்தம் சிதறாது சீர்பெறப் - புத்தியில்*
*வாநீ அமர்ந்திட வாக்கு பெருகிட*
*வாணியின் தாளை வணங்கு!* *(60)*

*தன்னே ரிலாளாம் தனக்குவமை தானானாள்*
*பொன்னேர் முகமும் புலமையால் - மின்னேர்*
*வசீகர வாணி வழங்குவாள், ஞானப்*
*பசிபோக்கும் செந்தமிழ்ப் பால்!* *(61)*

*தேர்ந்தெடுத்த சொற்கள் தெளிவான சிந்தனை*
*யார்க்கென்றா ராய்ந்துசொலும் சாதுர்யம் - யாரிந்தச்*
*சொல்லின்செல் வன்கொலோ! என்றிரா மன்வியக்கும்*
*வல்லமைதந் தாள்வாணி யே!* *(62)*

*வந்தனம் பாரதி வாணி சரஸ்வதி*
*மந்தனென் மூளை முடுக்கினில் - வந்துநுண்*
*ஆன்ம தரிசன ஆர்வம் பெருக்கிடு*
*நான்மகன் அன்றோ நினக்கு!* *(63)*

*வாணி மஹாலதன் வாசலில் வீற்றிருக்கும்*
*ராணியே நாடக ஏணியே - நானினி*
*எப்போதும் நிந்தன் எழிலுருவை மாந்திட*
*இப்போதே நெஞ்சம் இரங்கு!* *(64)*

*கோபம் அகங்காரம் கர்வம் புறங்கூறல்*
*தாபம் தணியாதோர் தீவீரம் - பாபம்*
*வரிந்திடச் செய்திடும் வீணர்தம் தீங்கில்*
*இருந்திட மாட்டாள் இவள்!* *(65)*

*கம்பனின் இல்லத்துக் கட்டுத் தறிபாட*
*செம்பொற் சிலைநீ அருள்செய்தாய் -அம்பிகே*
*உண்ணதான் வாயென்றால் ஊமையாய் ஆக்கிவிடு*
*வண்ணப்பா வாய்வாக்கில் வா!* *(66)*

*தோப்பில் துரவில் தளும்பும் அடவியில்*
*மோப்பம் பிடிக்கும் மலர்வண்டில் - மேய்ப்புல்லின்*
*வண்ண மரகதத்தில் வெற்படி வாரத்து*
*மண்ணில் மழையின் மணம்!* *(67)*

*வாதாடல் வம்பிழுத்தல் வஞ்சித்தல் வைத்துமனை*
*சூதாடல் மாற்றான் மனைசுகித்தல் - தோதாக*
*வந்தவரை ஏய்த்து வழிப்பறி செய்தலிவை*
*அந்தவா ணிக்கே அவம்!* *(68)*

*சத்துவத்தில் சாந்தமாய், ராஜசத்தில் சாகசமாய்*
*சுத்தமன தாமசத்தில் சும்மாவாய் - அத்தனையும்*
*தாண்டி அனுபூதி தந்திடும் தாயிவளை*
*வேண்டிட வையத்தில் வான்!* *(69)*

# முப்பெரும் தேவியர்

வலுவிவள் சேர்க்கை, வளமிவள் நூற்கை
புலியிவள் மான்தோல் போர்த்தி - எளிமையாய்க்
காட்சி கொடுப்பாள் கலைவாணி; மாதிவள்
*மாட்சி மிகப்பெரிது காண்!* *(70)*

கற்பனை தந்து கவிதையும் தந்திடுவாள்
தற்பெருமை பேசினால் தவிர்த்துன்னை - அற்பனாய்ச்
செய்வாள் சரஸ்வதி, சேவித் தடங்கினால்
*பெய்வாள் திருஞானப் பால்!* *(71)*

தனியானை முன்செல் மணியோசை யாம்போல்
கனிவான சொல்முன் குரலில் - தணிவும்
உடையவர்கள் நாவில் தடையின்றி ஞானக்
*கொடையளிப்பாள் கோமகள் தான்!* *(72)*

கோல மயிற்சாயல் கூவும் குயில்வாயள்
நூலை நிகர்த்துநெளி நுண்ணிடையாள் - பாலை
வனச்சோலை பாக்கள் விழையும் கவிக்கு
*மனச்சோர்வை நீக்கும் மருந்து!* *(73)*

எழுதாக் கிளவி முறையாய்த் தினமும்
பழகிப் பயிலப் புரப்பாள் - அழகி
துடியிடையில் பிள்ளையாய்த் தாங்குவாள், மற்றும்தன்
*மடியிலே சீராட்டு வாள்!* *(74)*

## கிரேஸி மோகன்

வெண்டா மரைமேனி, செந்தா மரைப்பாதம்
விண்தா மரைபூத்தோன் வல்லியே - கண்தா
மரைபாராய் பண்தா மறைவாணி என்தாய்
முறையன்றோ நீயிம் மகர்க்கு! (75)

பாழெனத் தள்ளாதிப் பாவியை உன்றன்கை
யாழெனக் கொண்டுமடி ஏந்திடு - ஊழெனை
வாட்டாத வண்ணம் வகைசெய்வாய் வாணி
பாட்டெழுதப் போகுமே பாடு! (76)

தேவாரம் வேண்டா திருவாய் மொழிவேண்டா
நாவோரம் நின்றென்னை நானறியும் - தீவீரத்
தேடலில் ஈடுபட்டு வீடான் மணிலென்றும்
நீடூழி வாழவைவா ணி! (77)

கூத்தன் சபாபதி கூடப் பிறந்ததால்
கூத்தனூர் கொண்டாயோ கோயிலாய் - நேர்த்தியாய்
அம்மா எனக்களிப்பாய் ஆடா தசங்காது
சும்மா இருக்கும் சுகம்! (78)

காளமேகம் வெண்பாவில், கம்பன் விருத்தத்தில்
காளிதாசன் கற்பனை கங்கையில் - ஆளுமை
செய்பவளே சீராக என்றன்வெண் பாக்களை
உய்யவை நீதா உயிர்! (79)

## முப்பெரும் தேவியர்

*சங்கத் தமிழும், சதுர்மறையும், சாத்திரமும்*
*செங்கண்மால் நாம சகஸ்ரமும் - சங்கரியின்*
*ஆயிரம் பேரும் அதிகாரம் பெற்றது*
*தாயிவள் தான்தந்த தால்!* (80)

*நாடகம், சங்கீதம், நாட்டியம், முத்தமிழ்*
*பாடும் பதிகங்கள் பாசுரங்கள் - நாடிடும்*
*தன்முத் திரைபதிக்கத் தேவி சரஸ்வதியின்*
*சின்முத் திரைக்கை சிறப்பு!* (81)

*சொல்லக்கேள் நெஞ்சே சகத்தில் பிறந்திறக்கும்*
*அல்லல்தீர் மாமருந் தாகுமிங்கு - வெள்ளத்தை*
*ஒத்து விரைந்துனக் கோதுவிக்கும் ஓங்கார*
*வித்தைக் கதிபதியின் வாக்கு!* (82)

*மாதவம் செய்தும் மகாயக்ஞும் செய்துமுன்*
*தீதவம் தீராது, தாமரைப் - போதமர்*
*வாணியை, ஞான விசார உயர்வளிக்கும்*
*ஏணியை எந்நாளும் ஏத்து!* (83)

*நாட்செல்ல நாட்செல்ல நாம்செல்ல வேண்டுமே*
*ஆட்கொல்லி கூற்றன் அழைப்பானே - கேள்நல்ல*
*வார்த்தைக் கதிபதி வாணியைப் போற்றிடப்*
*பூர்த்தியா கும்பார் பிறப்பு!* (84)

## கிரேஸி மோகன்

நாடுவாய் நெஞ்சே நளினம் அமர்வோளை
சூடுவாய் நெஞ்சே சரோருகத்தாள் - பாடுவாய்
நெஞ்சே பதுமத்தில் நல்லதோர் வீணையைக்
கொஞ்சும் கலையாள் கழல்! *(85)*

அறிவை அளித்திடும், ஆன்மீக ஞானச்
செறிவு நிலைத்திடும் சான்றோர் - உறவாய்
நெறியை உணர்த்திடும் நான்முகன் பத்தினி
வெறிநான் அகந்தை விலக்கு! *(86)*

நாக்கில் நரம்பின்றி நாணாது பேசுவோர்
வாக்கில் வரமாட்டாள் வாணியவள் - தூக்கில்
இடப்படும் போதும் இனியன கூறத்
தடைபடுமே தண்டனைத் தீர்ப்பு! *(87)*

கண்ணன் குழலில் கணபதி மோதகத்தில்
வண்ண மயிலூர்வோன் வேல்முனையில் - மின்னும்
திருவில், மகேசன் தவத்தில் திகழ்வாள்
உருவிலிவள் பாயும் ஒளி! *(88)*

தும்பைவெண் பட்டுடுத்தித் தாமரை வீற்றவளை
நம்பியூ டாடும்நன் நூலிழையும் - கம்பனில்லக்
கட்டுத் தறியில் கவியாகி நெய்துவெண்
பட்டளிக்கும் பாரதிக்கே பார் *(89)*

# முப்பெரும் தேவியர்

கதிர்முகத்தாள் செந்நெல் கதிர்நகத்தால் யாழில்
உதிர்சுரத்தால் எண்எண் உரைப்பாள் - சதுர்முகத்தோன்
பத்தினி, கம்பனைப் பாரதியைப் போலென்னைப்
பத்திநீ எண்ணு பரிந்து! *(90)*

தொழுகைக்கும், காலில் விழுகைக்கும், கண்ணீர்
அழுகைக்கும் வாணி அசையாள் - கழுகைத்தன்
வாகனமாய்க் கொண்டோன் வயிறுதித்தோன் பத்தினி
நாகனமற் றோர்பால் நிலைப்பு *(91)*

நாபிக் கமலத்தில் நன்கமர்ந்து நானிலம்
சோபிக்க ஓதும் சதுர்முகனை - ஸ்தாபிக்க
வைத்தவளைப் போற்றிட வையத் தளவுகல்வி
கைத்தல நெல்லிக் கனி! *(92)*

அண்டாது வெவ்வினைகள், ஆய கலைகளை
விண்டோதும் வீணை விரலாளைக் - கண்டோடும்
கொண்டாடும் அன்பர் குடும்பத்து வாரிசென
வெண்டா மரையாள் விருப்பு! *(93)*

விருந்தா வனக்கண்ணன் வேய்ங்குழல் வாக்கு,
கருந்தா மரைக்கண்கள், கூறைக்குள் - பொருந்தாத
இல்லா இடையை, இருத்துவோர் புத்தியில்
சொல்லாள் பதத்தின் சுவடு! *(94)*

## கிரேஸி மோகன்

சோதித்த பின்வாழ்க்கை சொல்லித் தரும்பாடம்;
வேதத் தயன்மணந்த வாணியோ - போதித்துக்
கூட்டுவாள் சத்சங்கம், காட்டுவாள் நன்னெறி
தீட்டுவாள் வைரமாகத் தேய்த்து! *(95)*

தலையெழுத்தை மாற்றும் திருப்பட்டூர் ஐயன்
விலைமதிப் பில்லா விதியுவதீ! - கலையெழுத்தென்
மேடை வசனத்தின் மேன்மைக்கு, வெண்ணிற
ஆடை அணிந்தோய் அரண்! *(96)*

கேசவன் திருமார் புறைவோளும் வெள்ளிமலை
ஈசன் இடபாகம் உற்றவளும் - நேசமுடன்
விதியுவதி யும்நீ விழிப்படையச் சேர்ந்து
பதிலளித்துச் சேர்ப்பார் பதம்! *(97)*

மகர யாழை மடியேந்தி மீட்டி
அகர முதல அளிப்பாள் - நுகர்வோர்
கவியிளங்கோ, கம்பன், குருபரர் போலப்
புவிவிளங்க வாக்கன் பளிப்பு! *(98)*

சம்பு மகாதேவன் சோதரி, செவ்விதழ்
அம்போ ருகமமர்ந்தோய் ஆதரி - அம்பே
சகலகலா வல்லி, சரஸ்வதி வாணி
புகலெனக்குன் பாதாம் புயம்! *(99)*

## முப்பெரும் தேவியர்

பாத நமஸ்காரம், பூசை புனஸ்காரம்
ஏதும் புரிந்திலேன் என்றாலும் - ஆதுரம்
உற்றெனது வாக்கிலே உட்கார்ந்து வெண்பாக்கள்
பெற்றிட வைத்தாள்வெண் பூ! *(100)*

நூற்பயன்

வெண்பூ அமர்ந்தாளை வெண்பூவைப் போற்றிடும்
வெண்பா ஒருநூறும் ஓதிட - மண்ணாளும்
வேந்தரும் மண்டியிட்டு வேண்டிக் கவிகேட்டே
ஏந்துவார் தம்மிரண்டு கை!

## முப்பெரும் தேவியர்

காப்பு

அகழ்வாரைத் தாங்கிடும் அன்னைபின் வந்த
முகிழ்வா ரிசமமர்ந்த மாமி - புகழ்பாடப்
பாழியந்தோள் மாமன்தோப் புக்கரணம் போட்டபின்
பாழியைத்தந் தோன்தாள் அரண்!

சமர்ப்பணம்

அன்னை இருந்த அசோகவனம் சேர்ந்தாங்கே
அண்ணல் கணையாழி தந்தவள் - முன்னுச்சிச்
சூடா மணிகொணர்ந்து தேடும் இராகவன்
பாடொழித்தோன் பாதசமர்ப் பிப்பு!

நூல்

கஷ்டம் கலைந்திடும், இஷ்டம் இணங்கிடும்
அஷ்ட இலக்குமிகள் ஆசியால் - இஷ்டமாய்த்
தக்க தமிழில் தடையின்றிப் பாட்டெழுத
லக்குமி தாராய் லயம்! *(1)*

கள்ளம் கபடின்றி கூப்பிட்ட சங்கரர்க்காய்
எள்ளளவு சல்லியும் இல்லாதாள் - இல்லத்தில்
தங்கநெல்லி யாய்ப்பொழிந்த தாயே தயாபரியே
இங்கென்றன் வாக்கிலும் வா! *(2)*

சுதாமன் அவலுக்குச் சொர்ணங்கள் தந்தாய்
உதாரமாய்க் கீர்டத்தி கணவர்க் - கதோவென்று
பொன்னோடு பேரைப் புறக்கணித்த பூவையே
நின்னோடு சேர்ந்தகண்ணன் நார்! *(3)*

## கிரேஸி மோகன்

பொன்வைத் திடாதங்கே பூவைப்போர் மீதிவள்
கண்வைக்கக் கஞ்சனும் கர்ணனே - முன்வைத்த
காலைப்பின் வைக்காக் கடுமுயற்சி யாளர்க்குப்
பாலையும் பூங்கா வனம்! *(4)*

தான மவள்லீலை தர்ம மவள்வேலை
மானம் புகுந்து மகாபலி - தானமிட்ட
கர்வத்தை மூவடியால் தாவி அடக்கிய
தர்மத்தின் தாரம் திரு! *(5)*

தானம் கொடுத்தமாட்டின் தாடை பிடிப்பதை
ஈனம் எனநூல் இயம்பிடினும் - மானம்
பெரிதென எண்ணாமல் பிச்சையெடுப் போரைச்
சிறிதென் றொதுக்குவாள் ஸ்ரீ! *(6)*

பண்டிதர் பின்தொடரப் பிச்சைக்குப் போயன்று
கொண்டபழங் கஞ்சி தனையாங்கே - உண்டபின்
கையோ டகந்தை கழவு ரமணரை
மெய்யோடு சேர்த்தாள்பொன் மாது! *(7)*

அக்காள்மூ தேவி அயர்ந்துறங்கும் இல்லத்தில்
நிற்காள்ஸ்ரீ தேவிஎன்பர் நூலோர்கள் - முக்காலம்
தூங்கும் பெருமாளின் தூயதிருப் பாதங்கள்
தாங்குகிறாள் தூங்காமல் தாய்! *(8)*

## முப்பெரும் தேவியர்

*பூணுமய பக்திக்கே பூரித் தளித்திடும்*
*ஏனைய தெய்வங்கள் ஏற்றத்தை - நாணய*
*நாயகி ஏற்பது நாற்புற சுத்தத்தைப்*
*போயகி லத்தைப் பெருக்கு!* *(9)*

*அலையில் பிறந்தவள் அலையில் புகுந்தவள்*
*அலைதாண்டாப் பத்தினியை, அப்பொற் - சிலையை*
*விழியில் பதித்து விரலால் ஜபிக்கக்*
*கிழியும் வறுமையெனுங் கீற்று!* *(10)*

*வித்தைக்கு வேண்டும் வினயம், அதிதீர*
*சித்தத்தில் வேண்டும் சரிசமம் - சுத்தத்தை*
*வேண்டுவாள் செந்திரு, வாசல் தெளிப்போர்க்கு*
*யாண்டும் வறுமை இல!* *(11)*

*பட்ட கடனால் பயந்தோடி பாலாஜி*
*எட்டா மலையுச்சி ஏறிட - வட்டி*
*அசலோடு சேர்த்தளிக்கும் அன்னை அருளால்*
*எசமானாய் ஏழுமலை யான்!* *(12)*

*வானுகந்து வந்தீரே வைகுண்ட வாசலில்*
*நானகன்று சூரியாய் நிற்பதற்குத் - தானமொன்று*
*செய்ய வருவாளே ஸ்ரீமன்நா ராயணரின்*
*கையைப் பிடித்து கனகு!* *(13)*

## கிரேஸி மோகன்

*தரமும் தரத்தில் நிரந்தரமும், செய்யும்*
*கருமத்தால் ஏழைக் குதவும் - கரமும்*
*இருப்பவர் வீட்டை இமையாது காப்பாள்,*
*திருப்பள்ளி கொள்ளாள் திரு!* (14)

*பயில்வான் இறந்தாலும், பண்டிதனாய் வாழ்ந்த*
*பயில்வோன் இறந்தாலும் பையரவில் - துயில்வோன்*
*திருநாட்டில் சேர்ந்திடத் தேவை திருவின்*
*ஒருவார்த்தை என்ப துணர்!* (15)

*அவலைச் சுசீலை அளிக்கக் குசேலன்*
*கவலை களைந்தான் கிருஷ்ணன் - அவளை*
*மணந்ததால் அன்றோமால் வள்ளலாய்த் தம்பேர்*
*மணக்க மகிழ்விக் கிறான்!* (16)

*நாத்தனார் வீரத்தைக், கூத்தனூர் கல்வியை*
*ஏத்திட ஏற்றம்தான், என்றாலும் - பூத்தமலர்ச்*
*செவ்விதழின் மீதமரும் செல்வியருள் இல்லையெனில்*
*இவ்வுலகில் இல்லை இருப்பு!* (17)

*மஞ்சள் அரிசியில் மங்கல வாத்தியத்தில்*
*வஞ்சியர் கல்யாண வைபவத்தில் - நெஞ்சணைந்த*
*தாலியில் தங்கமாய்த் தங்கியவள் தாம்பத்ய*
*வேலியைக் காக்கும்செல் வி!* (18)

## முப்பெரும் தேவியர்

*எண்டிசை தாங்கிநிற்கும் யானைகள் சூழ்ந்திருக்க
விண்ணவர் போற்றும் திருமகள் - கண்ணனின்
நாயகி; செந்தா மரையாள் இலக்குமி
தாயவள் தாளே சரண்!* (19)

*சித்திரம் கைப்பழக்கம், செந்தமிழ் நாப்பழக்கம்
பத்தரை மாத்துப்பொன் பெண்பழக்கம் - உத்தம
பக்தி வயலில் புளகநீர் பாய்ச்சிட
முக்திநெல் லாய்முளைக்கும் முன்!* (20)

*தங்கநிற வண்டுகள் தாதுக்காய் மொய்த்திடப்
பொங்கும் புளகமலர் போல்மாலின் - அங்கம்
புளகத்தால் கூச்செறியப் பார்வையால் உண்ணும்
அலகொத்த கண்ணாள் அவள்!* (21)

*நீல மலர்நாடும் நந்தவன வண்டேபோல்
நீள விழியிரண்டும் நாரணன் - கோலத்தைக்
கொண்டதோர் நாணத்தால், காணும் விருப்பத்தால்
அண்டமாய்ச் சுற்றும் அலைந்து!* (22)

*ஏழை சிரிப்பில், எடுப்பார்கைப் பிள்ளையின்
பேழைவாய் பொக்கையின் புன்னகையில் - வாழையடி
வாழையாய் வந்த வழக்கத்தின் மேன்மையில்
தாழை எனமணக்கும் தாய்!* (23

## கிரேஸி மோகன்

உச்சிவான் தோன்றி உறுமும் இடிமின்னல்
பச்சை மலையில் பளிச்சிடலாய் - அச்சுதன்
மாலின் மரகத மார்பில் மகாலக்ஷ்மி
பாலின் நிறத்தில் பொலிவு! (24)

மடைதிறந்த வெள்ளமாய் மங்கலப் பார்வை
கடைதிறந்து காணமயிர்க் கால்கள் - புடைத்தெழ
எல்லையில் லாயின்பம் எம்பிரா னுக்களிப்போய்
அல்லலில்லா வாழ்வை அளி! (25)

கவுத்துவம் பூண்டவன், கொன்று மதுவைக்
குவித்தவன் ஆகத் திருப்பவளே - சிவந்தவிழி
நீலமணி பட்டதால் நீலமுற்ற பார்வையைப்
பாலனென் மீது பதி! (26)

கைடபனைக் கொன்றவன், கார்முகிலாய்ச் சேடன்மேல்
மெய்படரச் சாய்ந்தவன்மேல் மின்னலாய் - மையடர்ந்த
பங்கயக் கண்களால் பார்த்தது போதுமென்மேல்
திங்கள் விழியைத் திருப்பு! (27)

நாணுமுன் கண்களை நாணாக்கி மன்மதன்
வேணுகோ பாலன்மீ தெய்துவெற்றி - பூணுவான்
பாற்கடல் தோன்றிய பாவையே பார்வையை
ஓர்கணம் என்மீ துரசு! (28)

## முப்பெரும் தேவியர்

பயிரான பூர்வஜென்ம பாவங்கள் போக்கும்
அயிரா வதத்தில் அமர்த்தும் - உயிராக
எண்ணினால் தங்குவாள், ஏத்தினால் தாங்குவாள்
கண்ணினால் காவலிருப் பாள்! *(29)*

அத்தகைய பார்வை அடியனென் மீதுபட்டால்
எத்தகைய செல்வம் எனைச்சேரும் - குத்தகையாய்ப்
பார்க்கவிநீ பாலனெனை ஓரவிழிப் பார்வையினால்
பார்!கவியாய் மாறிடுவேன் நான்! *(30)*

பார்த்தனுக்குத் தேரோட்டி பாரதப்போர் செய்தவனின்
மார்புத் திடல்வாழ் மகாலக்ஷ்மி - சோறிடும்
சுத்தம் எதிர்பார்ப்பாள் செல்வம் அளித்திட
அத்தகுவா சாரம் அணி! *(31)*

குப்பையில் மாணிக்கக் கல்லாய் மிளிர்ந்திடுவாள்
அப்பழுக்குச் சேற்றிலும் அல்லியாவாள் - குப்பனின்
வீட்டுச் சுவரில் வரைந்தாலும் வந்தருள்
கூட்டும் வரலக்ஷ்மி காப்பு! *(32)*

சொர்ண நிறவதனம், செம்மா துளையதரம்
வர்ணனைக் கெட்டா வடிவழகு - கர்ணனை
மிஞ்சும் உதார மனத்திற் குரியவளால்
பஞ்சும் பசும்பொன்னாம் பார்! *(33)*

## கிரேஸி மோகன்

*அத்தன் அரிமால் அவதார மாயெடுத்த*
*பத்தையும் செய்த பணமிவளே - சத்த*
*நரசிம்மன் சாந்த நிலையுற்றான், லக்ஷ்மீ*
*நரசிம்மன் ஆனபிற கு!* *(34)*

*பெண்ணொருத்தி நின்றிடுவாள், பின்னிருந் தாடவனை*
*முன்னிறுத்தி ஈவாள் முழுவெற்றி - கண்ணுறுத்தும்*
*கானத் திருளிலன்று காகுத்தன், பின்தொடர்ந்த*
*ஜானகியால் கண்டான் ஜெயம்!* *(35)*

*அகலகில் லேனென் றரியவன் ஆகம்*
*புகுந்து கலந்தாளைப் பொன்னை - அகத்திலே*
*ஆரா தனைசெய் அடியார்தம் வாழ்விலென்றும்*
*வாராது காண்வறுமை யே!* *(36)*

*பத்தவ தாரப் பணிக்குதவப் பூதேவி,*
*நித்திரை யோகமோ நீளாவால், - பத்தர்க்குச்*
*சேர அருள்புரிவாள் ஸ்ரீதேவி, ஆகமால்*
*தாரங் களின்தயவால் தான்!* *(37)*

*உத்தம பத்தினியின் உச்சந் தலைவகிட்டில்*
*பத்தும் செயாத பணமுடிப்பில் - சுத்தமாய்ச்*
*சாணத் தெளிப்பில்ஸ்ரீ சூர்ண நுதற்பிறையில்*
*காணலாம் பொன்மகளின் கால்!* *(38)*

## முப்பெரும் தேவியர்

கன்றை விளிக்கும் கறவையின் கத்தலில்
நன்றுரைக்கும் நல்லோர் நயவாக்கில் - வென்று
முழங்கிடும் வீரத்தில், வேதாந்த மூச்சில்
புழங்கிடும் பொன்மகள் பேச்சு! *(39)*

யாப்பலங் காரத்தில், காப்புக் கவிதையில்
மூப்புணர்ந்தோர் போக்கின் முதிர்ச்சியில் - நாப்பிளக்கப்
பொய்பேசா நாவில், புறங்கூறாப் புத்தியில்
தைபூசத் தான்மாமி தேசு! *(40)*

ஏரோட்டி வேர்வையை, ஏமாந்த காதலால்
நீரோட்ட மான நினைவுகளைப் - போராட்ட
ஊழியன் கூலி உயர்விழந்த துக்கத்தைத்
தோழியாய்ப் பொற்கை துடைப்பு! *(41)*

பலியின் தலைவைத்துப் பாதாளம் பாய்ந்து
கலிதீர்த்த காலில் கழலாய் - ஒளிந்திருந்தாள்
பாதாளம் பாயும் பணமென்று சொன்னதன்
ஆதாரம் அன்றோ அவள்! *(42)*

பரம்பொரு ளாதாரப் பொன்மகள் பார்வை
தரம்தரும்சே தாரம் தவிர்த்து - வரம்தரும்
செய்கூலி பக்திக்குச் செய்யவளால் உன்பணப்
பைகாலி ஆகாது பார்! *(43)*

## கிரேஸி மோகன்

பணப்பை அரவம் படுத்த பொருளைக்
கணத்தும் பிரியாத கஞ்ச - மனத்தாளே,
ஓரக்கண் ணால்என்னை ஓர்முறை பார்த்தெனக்கு
சேரச்செய் செல்வச் செழிப்பு! *(44)*

வாளாழி வெண்சங்கு வில்லும் கதாயுதமும்
தோளாளும் தர்மத் தலைவனைப் - பாலாழி
தந்தமகள் தேர்ந்தெடுத்தாள் நாயகனாய் அன்றுமுதல்
அந்தஹரிக் கானந்த மாம்! *(45)*

பாக்கள் புனைந்திடுதல் பாரதியே ஆனாலும்
வாக்கில் பொருளாக வந்தமர்ந்து - ஆக்குவள்
ஆசுகவி தம்மை அகிலத்தில் செல்வந்தக்
காசுகவி யாய்பார்க் கவி! *(46)*

கருவளர் பிள்ளையைக் காத்தவன் மார்பில்
மருவத்ஸ மாக மிளிரும் - திருமகளைப்
புந்தியிலே வைத்தோர்க்குப் புத்திர பாக்கியமும்
சந்தான மும்தழைக்கு மாம்! *(47)*

கற்காத பேருக்கும் கோழைக்கும் தம்மருளைத்
துர்கா சரஸ்வதியர் தந்திடுவர் - தர்காதி
தர்க்கத்தை விட்டுநீ தாமசமாய் நின்றாலும்
நற்காவல் பொன்மகள் நட்பு! *(48)*

## முப்பெரும் தேவியர்

சீதையாய் ராமன்பின் சென்றளித் தாய்ஜெயத்தைக்
கோதையாய்க் கோவிந்தன் கைப்பிடித்தாய் - ராதை
யாகி ரசித்தாய் யதுகுலக் கண்ணனை
*பாஹிநீ பரதே வதே!* *(49)*

பிருகு குலத்தில் பிறந்த திருவே
உருகும் அடியார்க் குதவ - பெருகும்
அறம்பொருள் இன்பம் அளிப்போய், எனக்கு
*வரம்தரவா வீட்டுக்குள் வீடு!* *(50)*

சிங்கம் அரியா சனத்து மடியமர்ந்து
பொங்கும் அவன்சீற்றம் போக்கினோய் - தங்க
வதனத்துத் தாயே வரவேண்டும் மாலற்
*புதனோடு பொன்சேர்ந்தாற் போல்!* *(51)*

வைகுண்ட வாசல் விளக்கேற்றும் பொன்ஒளியே,
பைகொண்ட பாற்கடல் பாம்பணைந்தோன் - மெய்கொண்ட
ஐவர்க்காய் தூது நடந்த களைப்பகலக்
*கைவைத்துத் தீர்ப்போளே காப்பு!* *(52)*

வீரென்று காற்று வீசப் பொழிந்திடும்
நீருண்ட மேகம் நிகர்த்தது- தார்சூடும்
மாலன் மணிவண்ணன் மாதவன் நாரணனைத்
*தாலாட்டும் தாய்விழிகள் தாம்!* *(53)*

## கிரேஸி மோகன்

*புத்தி பலம்வீரம் பொன்புகழ் பேருனைச்*
*சுத்தி வலம்வரும் செல்விபதம் - ஒத்தி*
*விழிநீர் அபிஷேகம் வார்த்திடப் பக்தி*
*வழிகூறும் முக்தி வரை!* *(54)*

வேதம் படித்தென்ன, வேதாந்தம் கற்றென்ன
சீதரன் பாதம் சொடுக்கெடுப்பாள் - பாதம்
பணிந்திடு மானுடா! பாரதன்பின் உன்னுள்
*கனிந்திடும் நல்முத்திக் காய்!* *(55)*

கற்புக் கணியுனைக் காகுத்தன் சோதிக்கப்
பொற்பூ புகுந்தெழுந்தாய் பூரணமாய் - அற்ப
இராவணன் தீவெரிய நீயிட்ட தீயே
*இராகவன் தூதன் எரிப்பு!* *(56)*

ஆடிவெள்ளி உன்னில்லம் தேடிவரும் தேவியிடம்
ஓடி ஒளியாதே முன்கதவை - மூடி
உறங்காதே கண்விழிப்பாய் உள்ளக் கதவைத்
*திறந்தால் வருவாள் திரு!* *(57)*

கருடவாஹ னத்தமர்வாள்; கோலா சுரனை
உருவழித்தாள்; எல்லா வினையும் - கருவறுப்பாள்;
இம்மை, மறுமை இரண்டும் அருள்சேர்ப்பாள்
*அம்மை அவளே அரண்!* *(58)*

## முப்பெரும் தேவியர்

*குமுத வதனம், கடல்கடைந்து வந்த*
*அமுத வளர்மதி அன்னாள் - துமியாய்த்*
*தெறித்திடும் பாற்கடலில் தூங்கும் பொருளை*
*வரித்திடும் செல்வியை வாழ்த்து!* *(59)*

*சாரங்கன் வில்லுக்குச் சக்தி அளித்திடும்*
*கூரம்புக் கண்ணாளே கோமகளே! - ஓரங்கை*
*பங்கஜம் ஏந்தமறு பொற்கரத்தால் பாலிக்கும்*
*அங்குசம்நீ ஆனைநான் ஆள்!* *(60)*

*முனிபிருகு வாரிசே மூவா முகுந்தன்*
*பணிகாத்தல் பக்க பலமே - அணிபொற்*
*சரமே அவன்மார் சரோஜமே தாமோ*
*தரனுக்குத் தாயே துணை!* *(61)*

*கண்பறிக்கும் காந்தி, கமல முகம்கண்கள்,*
*விண்பரப்பில் எண்திசையாய் வீற்றிருந்து - மண்பிறப்பை*
*நோக்கி இயக்குவாள், நந்த குமாரனை*
*ஏக்கமுற வைக்கும் எழில்!* *(62)*

*பொறிகளுக்கு எட்டாத போகமே, ஞான*
*வரிகளுக் குட்பட்ட வாக்கே - நெறியாளர்*
*நெஞ்சத் திருந்து தருமம் வளர்க்கும்நின்*
*கஞ்சமலர்த் தாளே கதி!* *(63)*

*வாள்எதிர்த்தால் நந்தகி, வில்எதிர்த்தால் சாரங்கி*
*ஆள்எதிர்த்தால் வெண்சங்கு சக்கரம் - கோள்எதிர்த்தால்*
*வல்ல கதாயுதம் வாய்த்தவைந் தாயுதங்கள்*
*வல்லியுன் வல்லமையன் றோ!* *(64)*

*பேராசை யின்பின் சென்றால் பெருநஷ்டம்;*
*மாரீச மானென் றுணராமல் - ஓராசைப்*
*பொன்மானை வேண்டப் பெம்மானைப் போவென்று*
*பெண்மான் அனுப்பினாள் பின்!* *(65)*

*ஸ்ரீபீடம் கொண்டாள் சுரர்பூஜை செய்கின்ற*
*ஸ்ரீலக்ஷ்மி தேவி மஹாமாயை - ஸ்ரீதரன்*
*நாயகி சங்கொடு சக்கரம் ஏந்திடுவாள்*
*தாயவள் தாளே சரண்!* *(66)*

*சிலையை வளைக்கவந்த ஸ்ரீராமன், செம்பொற்*
*சிலையான சீதையால் சொக்கிச் - சிலையாகி,*
*மற்றவர் வாய்ப்பை இழந்திடக் கைவில்லை*
*இற்றிட வைத்தாள் இவள்!* *(67)*

*தரித்திரமாய் வந்தாடும் தாண்டவக் கோனை*
*உருத்தெரியா வண்ணம் ஒளிரச் - சரித்திரமாய்ச்*
*செய்தெதிர் காலத்தைச் சீரும் சிறப்புமாய்ப்*
*பெய்தா தரித்தளிப்பாள் பொன்!* *(68)*

## முப்பெரும் தேவியர்

செந்தா மரையமர்ந்து சேவிப்போர்க் கென்றென்றும்
இந்தா எனவரங்கள் ஈவாளை - நந்தா
விளக்கனைய நாயகியைச் செந்திருவை மாலின்
உளக்கனியை வைத்திடுவோம் உள்! *(69)*

கோதையாய்க் ,கோகுலக் கூட்டத்து தாதியாய்,
ராதையாய் வந்தவனை ரட்சித்தாள் - கீதையாய்
வாக்கில் புகுந்துவந்த பாக்கிய லஷ்மியே
காக்கும் கடவுளுக்கும் காப்பு! *(70)*

ஏறுக்கு மாறான நூற்றுவர்க்குத் தோல்விதரப்
பாருக்கு வந்தபளு போக்கிடப் - போருக்குக்
காரணப் பாஞ்சாலி கூந்தல் முடித்துவைத்து
நாரணர்க்குச் செய்தாள் நலம்! *(71)*

அம்பிகை பொன்மகளை ஆரா தனைசெய்து
நம்பினோர் கெட்டதில்லை நானிலத்தில் - சொம்பிலே
தேங்காய் மாவிலை தண்ணிள நீர்வைத்துப்
பாங்காய் இவளைப் பணி! *(72)*

வேதம் வளையல், விளக்கும் உபநிடதம்
பாதச் சதங்கை, புராணங்கள் - காதணி,
கோதை திருப்பாவை கொண்டாள் புடைவையாய்ப்,
பேதையென் பாபாதப் பூ! *(73)*

## கிரேஸி மோகன்

பாலுக் கழும்சேய்க்குப் பார்வதியால் ஞானம்!
கோலக் கவிக்குக் கலைவாணி! - மாலை
மணந்தாள் 'அகலகிலேன்' என்றவன் மார்பில்
இணைந்தாள் கதியிம்மைக் கே! (74)

ஏழை இருபத்தி ஏழைப் பிரசவித்துப்
பாழும் வறுமையால் பாடுறத் - தோழனுக்குக்
கண்ணன்சம் பத்தைக் கொடுத்திட வைத்ததும்
அன்னை தனலஷ்மி அன்பு! (75)

அச்சம் தவிர்த்திடும், ஆண்மை பெருக்கிடும்
உச்சப் புகழில் உலவவிடும் - பச்சைமால்
மெச்சி அணைக்கும் மின்னற் கொடியேநீ
பிச்சையிடு ஞானப் பிடிப்பு! (76)

வண்ணான் சொல்ல வரித்த மனையிவளைச்
சொன்னான் வனத்திற்குச் செல்லென்று - பின்னாளில்
தந்தை கதைசொல்லத் தந்தாள் இருபிள்ளை
விந்தை இவள்செய் விதி! (77)

அண்ணலும் நோக்கினான், அன்னையும் நோக்கினாள்
அண்ணலவன் நோக்கம் அவதாரம் - அன்னையவள்
நோக்கமோ அந்த நிலமடந்தை மாந்தரைக்
காக்கும் கருணைக் குணம்! (78)

## முப்பெரும் தேவியர்

*கொத்திய காகமது காகுத்தன் ஏவிய*
*அத்திர வெம்மை துரத்திடச் - சக்தி*
*தொலைந்து விழுந்தோன் சரணாகக் காலில்*
*தலையைத் திருப்பினாள் தாய்!* *(79)*

*தீதண்டா வண்ணம் திருக்கரம் ஏந்திடும்*
*கோதண்ட ராமன் கரம்பிடித்த - மாதாவைத்*
*தாழ வணங்கிநின் தாழ்வெலாம் போக்கிட*
*ஏழைக் குசேலா எழு!* *(80)*

*ஏழுமலைக் கேதிந்த ஏற்றம் எனப்பார்த்தால்*
*கீழமர்ந்த வல்லியிரு கைகளால் - ஊழ்தொலைக்க*
*வந்தவரைக் கேள்வனின் வட்டிக் கடன்தீர்க்க*
*உந்துகிறாள் உண்டியலுக் குள்!* *(81)*

*வள்ளென்று வீழாதே, தள்ளென்று கூறாதே*
*உள்ளொன்று வைத்துப்பொய் பேசாதே - கொல்லென்று*
*பூத்த கமலத்தாள், பொல்லா தவர்களுக்*
*கேத்தவள் அல்ல இவள்!* *(82)*

*எட்டுவகைச் செல்வங்கள், எட்டு வகைசுகங்கள்*
*கிட்டும் அவள்கடைக் கண்ணொன்று - பட்டால்;*
*முராரி சகியால் முகாரி இசைக்கும்*
*பராரிக்கும் வாழ்வில் பொருள்!* *(83)*

## கிரேஸி மோகன்

*வாழ்வில் பொருளிருந்தும் வாழ்வின் பொருளறியார்*
*தாழ்வில் புகமறுப்பாள் தங்கமகள்! - ஊழ்வினை*
*தந்த பொருளைத் திரும்ப எடுத்தழிப்பாள்*
*சிந்தையின் செல்வச் செறுக்கு!* (84)

*குறுக்குவழி சென்று குவித்த பணத்தால்*
*சறுக்கு மரச்சரிவில் செல்லும், - கிறுக்குத்*
*தனம்பித்தம், செல்வி திருத்தாள் துதிக்கும்*
*மனம்தான்பொன் செய்யும் மருந்து!* (85)

*கொள்ளை அடிக்கவந்த கும்பினிக் காரனை*
*வெள்ளையனை ஓட விரட்டவைத்த - வல்லதோர்*
*அன்பாம் அஹிம்ஸை ஆயுதத்தைத் தந்தவளே*
*அன்னை விஜயலக்ஷ்மி தான்!* (86)

*எட்டுதிக்கு யானைகள் ஏந்திவரும் கங்கையால்*
*அட்டமா லஷ்மிக் கபிஷேகம் - கட்டுக்*
*கடங்காக் கடலரசன் ஆருயிர்ப் பெண்ணே*
*தடந்தோளன் மாலனமு தே!* (87)

*வீரத் துணிச்சலை வெற்றிக் கனிச்சுவையை*
*ஈரமுள்ள நெஞ்சத்திற் கீகையைச் - சேரும்*
*மனைமக்கள் வித்தை முளைக்கதிர், ஆக*
*அனைத்தும் அருள்வாள் அவள்!* (88)

## முப்பெரும் தேவியர்

*வாரிசம் ஓர்கையில், வெண்குடை ஓர்கையில்*
*ஆறுதல் கூட்டும் அபயத்தை - வேறிரண்*
*டங்கைகள் தாங்கிடும் ஆதி இலக்குமி*
*பங்கயத் தாளைப் பணி!* **(89)**

*வாடும் பயிர்கண்டு வாடிய வள்ளலார்*
*தேடும் அருட்ஜோதி தெய்வத்தை - நாடி*
*அழைத்தவர் முன்னமே ஆதிலஷ்மி சேர்த்துச்*
*செழித்திடப் பெய்வாள் மழை!* **(90)**

*ஆறில் அபயம் அளித்திடப்பொன், ஐந்தில்விண்*
*சோறமுதம், வில்லம்பு, சங்காழி - வாரிசத்தைத்*
*தாங்கும்செம் பட்டு தனலஷ்மி தேவியை*
*பாங்குற ஏத்திப் பணி!* **(91)**

*கன்னல், இரண்டு கமலம், கதைகதலி*
*செந்நெல், அபயவரம் சாதிப்பாள் - தன்எண்கை*
*தாங்கிப்பச் சையணிந்த தான்ய இலக்குமியைப்*
*பாங்கியென வெண்ணிப் பணி!* **(92)**

*கஜங்கள் குளிர்விக்கக், கையம் புஜங்கள்*
*நிஜம்கொள் அபயவரம், நீள்அம் - புஜங்கள்*
*தரிக்கப்பச் சையணிந்த தாய்கஜ லஷ்மி*
*பரத்தினும் மேலாம் பணி!* **(93)**

## கிரேஸி மோகன்

தங்கம், வயிரம், தடையிலாச் செல்வசுகம்,
மங்காப் புகழ்,மக்கள் சுற்றமிவை - எங்கெங்கும்
சேர்ப்பாள்செந் தாமரை வீற்றிருந் தெங்களைக்
காப்பாள் கஜலட் சுமி! (94)

இடையில் குழந்தை இரண்டிளநீர்க் கும்பம்
படைவாளும் கேடயமும் பற்றி - அடையாள
சேயபயம் காண்பிக்கும் சந்தான லஷ்மியைப்
போயபலை ஆகப் பணி! (95)

வரிசங்கு, சக்கரம், வில்லம்பு, சூலம்
வரஅபயம், புத்தகம், வீற்றெண் - கரத்தாள்,
அரத்த நிறத்தாடை பூண்டவீர லக்ஷ்மி
பெருமையாய்ச் சென்று பணி! (96)

பாசம்,வெண் சங்கு, படைதிகிரி, கேடயம்
வீசும்வாள், வாஞ்சை வரஅபயம் - பூசும்
திலகநிறக் கூறையாள் திக்விஜய லஷ்மி
புளகநீ ராடப் பணி! (97)

பூனைக்குப் போய்மணி பூட்டிய கர்வத்தில்
ஆனைக்கு லாடம் அடித்தேனே! - மோனை
எதுகை வரக்கண் டெழுதப் புகுந்தேன்
பதுமையே கொள்ளென் பழுது! (98)

# முப்பெரும் தேவியர்

மாவீரன் பாரதியின் தீவிரம் இல்லாது
தீவிரலைத் தீண்டத் தகுமோசொல் - நாவிருந்து
தட்டாமல் என்கவிதை நீதருக உன்பார்வை
பட்டால் துலங்குமென் பா! *(99)*

திருமஞ் ஜனக்காப்பே, குங்குமமே மாலின்
கருமை யுறாதங்கக் காப்பே, - திருமகளே,
திருமார் புறையும் திரவியமே என்றன்
ஒருநூறு பாவில் உறை! *(100)*

நூற்பயன்

அன்னை இலக்குமியை ஆரா தனைசெய்து
சின்னவன் சொன்னவெண்பா நூற்றையும் - உன்னிப்
படித்தோர்க் கோரிடம் தன்பதியின் பக்கம்
பிடித்துக் கொடுப்பாளென் தாய்!!

## முப்பெரும் தேவியர்

காப்பு

எருதேறும் ஈசன், எனையாளும் வேழன்
முருகேசன் காக்க மயிலில் - உருகாமல்
அன்பால் உனையிங் கடியேன் அழைக்கிறேன்
வெண்பாவில் அம்பாளே வா!

அம்மை அலங்காரி, ஒய்யாரி, ஓங்காரி
சிம்மம் இவர்ந்துவரும் ஸ்ரீசக்தி - நம்மையிங்கு
நன்கு புரக்கும் நவராத்ரி நாயகி
அன்பே வடிவாம் அவள்! *(1)*

கத்தி, உடுக்கை, கபாலம், திரிசூலம்
சக்தி கரமுற்ற ஆயுதங்கள் - பக்தி
இலாதோர் இதயச் சிலாவைப் பிளந்து
பலாவின் சுளையாய்ப் பதிந்து! *(2)*

அழுதாலும் பிள்ளைக் கவள்தான் பொறுப்பு
பழுதான பின்பும் பரிவை - விழுதாய்ப்
பொழிவாள் எமது பராசக்தி, நெஞ்சே
தொழுவாய் அவளைத் தொடர்ந்து! *(3)*

வானைக்கா வையம்கா தூணைத் துரும்பைக்கா
மோனை எதுகைக்கா மோஹனைக்கா - ஆனைக்கா
ஆத்தா அகிலாண்ட அம்மைபோல் வேறேகாப்
பாத்த எவரோ பகர்! *(4)*

## கிரேஸி மோகன்

*சுனையாக வாழும் சிவனிடபா கத்தில்*
*அணையாத சக்தியே, அம்மே - வினையான*
*மண்வாழ்வின் மாருதமாம் ஆனைக்கா அம்பிகை*
*விண்ணாகா சத்தின் விளைவு!* (5)

*யானைக் கொருகாலம் பூனைக் கொருகாலம்*
*ஆனைக்கா அன்னை அடியார்க்கோ - வானம்தீ*
*மண்காற்று நீர்காலம் மற்றுள்ள பூதமிவன்*
*முன்தோற்று மண்டியிடு மாம்!* (6)

*தேனுத்தே டும்வண்டாய்த் தாவி அடைக்கலமாய்*
*ஆனைக்கா அன்னை அடிபணிய - பானைத்தோல்*
*பிண்டத்தால் பட்டகடன் பாரம் உருமாறி*
*சுண்டைக்காய் ஆகும் சுருங்கி!* (7)

*பருவத ராஜ குமாரி பரமன்*
*ஒருவன் உருவமே உன்னி - உருகுகிறாள்*
*அன்னை திரிசூலி குண்டலினி யோகத்தில்*
*மின்னலாய்த் தோன்றிமறை வாள்!* (8)

*கூன்பிறையும் மான்மழுவும் தேனொழுகும் பூவிதழும்*
*பூணிறையின் ஊனுறையும் ஆணுமையை - நான்மறையும்*
*வானவரும் மாலயனும் காணஅரி தானவளைக்*
*காணத் திருவானைக் கா!* (9)

## முப்பெரும் தேவியர்

*தானே தனக்குவமை ஆன தவப்பொருளை*
*வீணே வருணித்தேன் வெண்பாவில் - ஆனை*
*தனையன்று காத்த அகிலாண்ட வல்லி*
*துணையென் றவளைத் துதி!* (10)

*அம்புயக் கண்ணாளை அன்புய்யக் காண்பாளை*
*அம்புவியைக் காப்பாளை அம்பாளை - அம்பலத்தார்*
*மேனியிடப் பெண்பாலை ஞான முலைப்பாலை*
*மானுடச்சேய்க் கீன்றாளை மேவு!* (11)

*முகிலாண்ட வெற்பாளும் முக்கண்ணன் கற்பாளும்*
*அகிலாண்ட ஆனைக்கா அம்மே - நகிலுண்ட*
*சம்பந்தன் போலெண்ணிச் செந்தமிழ்ப் பால்தருவாய்*
*இம்மந்தன் வாக்கில் இசைந்து!* (12)

*முகிலாண்ட பர்வத முக்கண்ணன் கர்வம்*
*அகிலாண்ட ஆனைக்கா அம்மே - நகிலாண்ட*
*கண்டத்தால் மேனியே காணாது போயினும்*
*உண்டெனெக்குன் பாதம் உதவு!* (13)

*கன்னலுன் இன்மொழி மின்னலுன் கண்ணொளி*
*பின்னலோ பாம்புக் கடைமொழி - உன்னிலே*
*தன்னை மறந்து தவம்செய்யும் பக்தர்க்கிங்*
*கெண்ண உருவம் எதற்கு?* (14)

## கிரேஸி மோகன்

*கல்லில் கலைநயம் சொல்லில் பொருள்மயம்*
*துள்ளும் அபிநயம் தோற்றமாம் - உள்ளும்*
*புறமும் உலவிப் பெருகும் பலவாம்*
*இறைவன் அறிவே இவள்!* *(15)*

*இதம்தரும் வாழும் விதம்தரும் நாளும்*
*புதன்தரும் காத்துப் பரிவை - நிதம்தரும்*
*இங்கே இகபரப் பேரற் புதம்தரும்*
*சங்கரி பதம்தரும்கொள் சார்ந்து!* *(16)*

*மலைப்புற வில்லாய் மலைப்புறம் ஏந்தி*
*மலைப்புரம் மூன்றை முடித்தோன் - களைப்புறா*
*வண்ணம் அவனை வலப்புரம் ஏந்திடும்*
*அன்னை இடமே அரண்!* *(17)*

*இதம்தரும் வாழ்வை நிதம்தரும் பொல்லா*
*மதம்தரும் ஆணவத்தை மாய்க்கும் - அதன்பின்*
*சுதந்திரப் பேரற் புதம்தரும் அம்பாள்*
*பதம்தரும் போற்றப் பணிந்து!* *(18)*

*மூளயோகம் வாயில்தாம் பூலம் உமிழ்ந்ததால்*
*காளமேகம் ஆன கலிவரதன் - போலஆக*
*வந்தென்நா வெற்றிலையில் வெண்பாக்கள் பூத்திட*
*உந்தன்தாம் பூலம் உமிழ்!* *(19)*

## முப்பெரும் தேவியர்

அச்சுறுத்தும் பூதமா? அன்றிமாத்ரு பூதமா?
எச்சரிக்கை யோடுச் சரிப்பதா? - நச்சரவம்
மாண்டோர் கபாலங்கள் பூண்டோன் இடபாகீ
வேண்டாமே வேஷ விருப்பு! *(20)*

கற்றதவள் நாமம் கசடறக் கைவரப்
பெற்றதவள் பாதாம் புயம்பணிதல் - மற்றேதும்
எண்ணா திருப்போர்தம் வாழ்வை இனிப்பாக்கும்
உண்ணா முலையாள் உறவு! *(21)*

நானார் அறிதல் நமக்கெதற் கன்னையே
நீயார் உணர்தலே நற்கதி - தாயார்
மகனைத் தொலைப்பாளா? மாதா தவித்தேன்
அகலா திருப்பாய் அணைத்து! *(22)*

மூகாம் பிகைஈசன் பாகாம் பிகைபக்தர்
மோகாம் பிகையாள் மலர்த்தாளில் - பாகாய்
உருகிக் கிடக்க உதவா மனமே
கருகிக் கரையும் கபடு! *(23)*

இமயபுர ஈசன் இடபாக வாசி
தமையன் திருமாலின் தங்கை - சமயபுர
மாரியம்மா ஆத்தாவை காரியமாய்ப் பார்த்தோரை
வீரியமாய்க் காப்பாள் விரைந்து! *(24)*

## கிரேஸி மோகன்

*பரமஹம்சர் பார்த்துப் பரவசத்தில் ஆழ்ந்த*
*அரனசைவே ஆதி உணர்வே - பரமசிவா*
*னந்த லஹரி நவநீத சோதரி*
*அந்தரி வந்தா தரி!* (25)

*விலையைக் கொடுத்து வலிய வினையில்*
*தலையைக் கொடுக்கும் மனத்தை - மலையத்*
*துவசன் மகளே தெளிவுற வைப்பாய்*
*கவசம் துணையுன் கழல்!* (26)

*ஷ்யாம கிருஷ்ண சகோதரி தக்ஷிண*
*ராம கிருஷ்ண உபாஸினி - நாம*
*சஹஸ்ர சொரூபிணி சாஸ்வத சாக்ஷி*
*ரஹஸ்ய சிநேகிதிர க்ஷி!* (27)

*புள்ளி மயிலாகப் புன்னை வனநாதர்*
*உள்ளம் உறையும் உமையாளே - வெள்ளி*
*விடையேறும் ஈசர் இடப்பாக வாழ்வே*
*மடையேனென் நாவில் மலர்!* (28)

*உன்னவரே ஞானத்தை உண்ணவரார் ஓடேந்தி*
*கண்ணசைவில் ஞானம் கொடுத்திடும் - அன்னபூர்ணி*
*என்நிலையைப் பாரம்மா ஏனிந்த பேதங்கள்*
*இன்னலற வைராக்யம் ஈ!* (29)

## முப்பெரும் தேவியர்

கல்லுறையும் தேரைக்கும் கர்பத் துயிர்கட்கும்
நல்லுணவை ஊட்டிடும் நாயகியே - கொல்லூரின்
மூகாம் பிகையே முதல்வியே வந்தெனது
தேகான்ம பாவத்தைத் தீர்! (30)

பன்னுமாக மத்தாள் பசித்தவர் ஓட்டிலிடும்
அன்னவாக னத்தாள் எனத்தினம் - உன்னியே
அர்கிய மாகிடும் அன்பர்க் கருளும்பொன்
துர்கே!யிப் பித்தளையைத் தேற்று! (31)

நின்றிட பூமா நகர்ந்திட ஸ்ரீதேவி
ஒன்றிக் கலந்திட நீளாவாம் - மன்றில்
நடமாடக் காளி நலம்பாட வாணி
அடநமக் காயிரம்மா யி! (32)

குடைபோல் விரிந்த புடவைக் கொசுவம்
இடையில் சொருகி இளைய - பிடியாய்க்
கபாலீசன் கோவிலில் கற்பகத்தைக் கண்டே
உபாசித் தடைவீர் உயர்வு! (33)

உமையாளை, ஈசனுக் குரியாளைக், கண்கள்
இமையாளாய் அன்பர் இதயம் - அமைவாளைக்
கற்பக வல்லியைக் கற்பனைக் கெட்டாத
அற்புதம் தன்னை அணுகு! (34)

## கிரேஸி மோகன்

கோமள வல்லியை சாமள வண்ணியை
ஆமள வேத்தும் அடியார்க்கு - நாமகள்
அள்ளிக் கொடுப்பாள்! அவர்நா அவளது
பள்ளித் தலமாகும் பார்! *(35)*

ஆவதும் போவதும் தேவதையுன் திட்டமென்றால்
நாவெதற்குப் பாவெதற்கு நீயெதற்கு - தீர்விதற்குச்
சொல்லடி மாயா சிவசக்தி, ஏனெதற்கு
முள்ளடியில் ரோஜா மலர்! *(36)*

எண்ணும் தொழிலவள், எண்ணிலா எண்ணமவள்
எண்ணுவோர்க் கேற்ற எழுச்சியவள் - எண்ணிடத்
தின்னும் புலியவள், தீனியாம் மானவள்
உண்ணா முலையா உன்னு! *(37)*

கடுவிடக் கண்ட கடவுளின் பொன்னார்
உடலிடம் கொண்ட உமையே - வடிவுடை
அம்மா உனைக்காண ஆர்வத் துடன்வருவேன்
பெம்மான் உடனென்னைப் பார்! *(38)*

கல்விக் கொடியுடையாள் செல்வத் திருவுடையாள்
வெல்லும் வடிவுடையாள் ஒற்றியூர் - வல்லியைக்
கண்டேனே கேசாதி பாத தரிசனம்
உண்டேனே அன்னையருள் ஊற்று! *(39)*

# முப்பெரும் தேவியர்

ஓலை ஜபமணி மாலை அபயமொடு
காலை மடித்துக் கொலுவிருக்கும் - பாலை
திரிபுர சுந்தரியைத் தேடி நெமிலி
வருபவர் வாழ்வில் வளம்! *(40)*

மீனாளை முத்தமிழ்த் தேனாளை அன்பர்க்குக்
கோணாளை கூடலுக்குக் கோனாளை - மானாளை
செஞ்சரணம் சேர்ப்பாளை மாசக்தி ஆத்தாளை
நெஞ்சத்தில் ஊற்றி நிரப்பு! *(41)*

நீரான, தீயான, நீள்விசும்பு காற்றான
பாரான வாராஹி யைப்பார்த்து - வாராய்
சமய புரத்தாள்தாள் சேவிக்க நெஞ்சச்
சுமைகளைத் தீர்ப்பாள் சுமந்து! *(42)*

புரத்தாள் சமய புரத்தாள் இமய
புரத்தான் இடது புரத்தாள் - திருத்தாள்
கருத்தால் வணங்க வரத்தால் அபயக்
கரத்தால் அணைப்பாள் குளிர்ந்து! *(43)*

மாரி சமயபுரக் காரி சதுர்வேத
தாரி பிரியா அரனர்த்த - நாரி
லலிதஅதி காரி கலிவிலகச் சேரீர்
பலிதஉப காரி பதம்! *(44)*

## கிரேஸி மோகன்

தேனைக்கால் ஏந்தித் திரிகின்ற வண்டேபோல்
ஊனைக்கால் தாங்க உலகுற்று - நானைப்போய்
பானைத்தோல் மேனியாய்ப் பாவிக்காப் பேரறிவை
ஆனைக்கா அம்மா அருள்! (45)

ஆயிரம் கண்ணுனக் கானாலும் கேட்கின்றேன்
தாயினும் சாலத் தெரிந்துபார் - மாயிநீ
அல்லா தெனக்கிங் கருள்வதார்? செய்வாய்இச்
செல்லாத காசைச் செலவு! (46)

நையப் புடைத்துநம் மையல் விரட்டிடக்
கையில் மணிப்பிரம்பு கொண்டவள் - உய்ய
மனோண்மனி பாதம் மகாகவி ஆக்கி
சிரோன்மணி சேர்க்கும் சிறப்பு! (47)

இவளே பரமஹ்ம்ஸர் பேசித் தொழுத
பவதா ரிணியாய்ச் சிரிப்பாள் - இவளேதான்
தர்க்காதி சாத்திரங்கள் தேடி அறியவொணா
துர்க்கா பரமேஸ் வரி! (48)

ஆகாயம், பூமி, அனல்,நீர், வளியென்று
நீகாணும் யாவும் அவளேதான் - பாகாய்
உருகிக் கிடக்க உதவா மனமே
கருகிக் கரையும் கபடு! (49)

## முப்பெரும் தேவியர்

மாதவன் சோதரி ஆதிரையான் பத்தினி
பூதலம் காக்கும் பராசக்தி - ஓதும்
மயிலாப்பூர் கற்பகமே மாற்றெனை; மூடன்நான்
கையிலாப்பு கொண்ட குரங்கு! *(50)*

பூரணி வைகுண்ட நாரணி கைலாச
நீறணி நாதனின் நாயகி - கூறுநீ
கோத்திரப் புத்திரனாய்க் கொள்வேன் எனையென்று
பூத்தநின் செவ்வாய் புலர்ந்து! *(51)*

சகுனங்கள் சாரா, சமூக்குகள் சாரா,
ககனநவ கோள்கள் கொடுக்கும் - சகலவித
தோஷங்கள் சாரா திருக்குவினை சாரா;நீ
போஷிக்கும் சக்திபதம் போற்று! *(52)*

மகிடா சுரனின் மகுடம் தெறித்துப்
பகடைபோல் பாயப் பறித்தாள் - சகடனைச்
செற்ற முகுந்தனின் உற்ற சகோதரி
வெற்றிக் கவளே வழி! *(53)*

வேத வயலது வித்தைப் பயிரது
கோதுகளை நீக்கும் கரமது - சாதகன்
நோயுறா வண்ணம் நல்லான் மனாய்மாற்றும்
ஆயிரங் காலத் தரண்! *(54)*

## கிரேஸி மோகன்

*இவ்வுலகில் நின்னருள் இல்லா துடையுமோ*
*வெவ்வினைகள் பூட்டும் வளைவிலங்கு - அவ்வண்ணம்*
*ஆகாது தேவீ அடியனேன் இப்பாவி*
*தேகான்ம பாவத்தைத் தீர்!* *(55)*

*வார்த்தைகள் அற்ற வெளிகண்டு விண்டாதோர்*
*போர்த்தும்மெய் ஞானப் புடைவையே - தீர்த்தங்கள்*
*முங்கியென் க்ஷேத்திரங்கள் தங்கியென் சம்புயிட*
*பங்கியுனைக் காணாத போது!* *(56)*

*வம்பாளாய் வாழ்ந்து வசைபாடிப் பொய்யுரைத்துத்*
*தெம்பாளும் யவ்வனம் தேய்ந்தபின் - அம்பாளை*
*மூப்பில் முனகலாய் கூப்பிடக் கேட்பாளே*
*யாப்பிலா குப்பையெதற் கென்று!* *(57)*

*வெண்பா தருவதென் வேட்கை தணிக்கவா?*
*அம்பாளுன் அச்சார ஆதரவா? - என்பதை*
*வேழனும் வேலனும் சூழநின் சம்புவொடு*
*ஏழையென் கண்முன் இயம்பு!* *(58)*

*அட்டாங்க நிட்டையில் மொட்டாய் மலர்ந்திங்கு*
*கிட்டாத இன்பம் கொடுப்பவளே - தட்டாமல்*
*அப்பேறு நானடைய அன்னையே இங்கேயே*
*இப்போதே வந்தென்னை ஆள்!* *(59)*

## முப்பெரும் தேவியர்

*சுத்தம் அசுத்தமெனச் சோதித் தயர்ந்திடும்*
*புத்தியின் பேதத்தைப் போக்கிடு - பித்தரின்*
*வாமத்தில் நின்றிடும் ஜாமத்து நீலமே*
*காமத்தைக் காளீ களை!* *(60)*

எழுதாத நாளே பழுதான நாளாம்
பொழுதென்றும் வெண்பா புனைந்து - தொழுதிடச்
செய்வாய் சிபாரிசு செவ்வேள் முருகனிடம்
பெய்வாய் தமிழென்றன் பால்! *(61)*

பெண்மூலம் நிர்மூலம் பேசிடும் பேதைகாள்
கண்மூலம் காத்திடும் கற்பகப் - பெண்மூலம்
ஜாதகம் சொல்லும் சனிசெவ்வாய் தோஷங்கள்
பாதகம்போய் ஆகும் பலன்! *(62)*

மஞ்சள் நிறப்பட்டில் மாணிக்க யாழ்மடியில்,
கொஞ்சும் கிளியேந்திக் கற்பனையை - விஞ்சிடும்
வண்ணம் கொலுவிருக்கும் அன்னையை எண்ணுவோர்
முன்னம் தமிழ்வண்டு மொய்ப்பு! *(63)*

சிங்கா சனமேறி சூலம் கரமேந்தி
எங்கேனும் தீங்கொன் றெழுந்தக்கால் - அங்கே
குதித்திடும் தேவி பதித்திடும் பாதம்
துதிப்பவர் நெஞ்சில் தெருள்! *(64)*

## கிரேஸி மோகன்

அபாயம் எனக்கூவி அஞ்சிடும் நெஞ்சே
உபாயம் உனக்குரைப்பேன் ஒன்று -கபாலி
மனமாளும் தேவி மயில்கற் பகத்தைத்
தினமோதிக் கொள்வாய் தெளிவு! (65)

பாலை வனக்கானல் சோலைப் புவிவாழ்வு
நாளைக் கடத்தாதே நன்நெஞ்சே - தோலைத்
தளர்த்தி வயோதிகம் தீண்டிடும் முன்னம்
உளத்தில் உமையாளை உன்னு! (66)

மூப்பு, முதுமை, முடிவில் மரணமெனக்
கூப்பிட்டா வந்திடும் கூற்றிங்கு?- காப்பாள்
கனம்கொண்ட பூங்குழலாள் கற்பகத் தாயார்
மனம்குளிர என்றுமிள மை! (67)

சகவாச தோஷம் புகமோசம் போகாச்
சகவாசம் சத்தில் சிலிர்க்க - சகவாச
ஈசருடல் கொண்ட இடபாகி இங்கெனக்கு
நீசருடன் வேண்டாமே நட்பு! (68)

நட்பெனக் கிங்குன் நினைவொன்றே போதுமே
கட்புலன்கள் கூட்டும் கிளர்ச்சியை - நுட்பமாய்
காற்றில் புனலில் கனலிலா காசத்தில்
விற்றிருக்கும் அம்மே விலக்கு! (69)

## முப்பெரும் தேவியர்

விலக்கவொணா வாழ்வின் நிலைக்கதவாம் ஆசை
அலைக்கழித் தைம்புலனை ஆட்டும் - முலைகனக்க
சம்பந்தச் சேய்க்குச் சுரந்தாய் அதுபோல
நம்பந்தம் ஆக நினை! *(70)*

நினைவை மடக்கி மனத்தை முடக்கி
அணை,வை புலனை அடக்கி - கணைவிற்
புருவத்தாள் ஞான உருவத்தாள் பாதம்
மருவத்துள் தூளாகும் மாசு! *(71)*

மாசுணப் புற்றில் மகிழ்ந்துகை விட்டாற்போல்
ஆசுணம் ஐம்புல ஆசைகள் - வீசுநற்
காற்றால் கமகமக்கும் குன்றிமையப் பார்வதிமுன்
தோற்றே அடங்கும் திருக்கு! *(72)*

திருக்கை அபயம் திருக்கால் உபயம்
சறுக்கி விழாத சபையும் - இருக்கையும்
போட்டுக் கொடுக்கும் பராசக்தி பக்தரைக்
கேட்டுத் தெரிந்துகொள் கூட்டு! *(73)*

கூட்டும் ரசமும் குழம்பும் பொறியலும்
போட்டுப் பிசைந்து பருகிடும் - நாட்டம்
விடுத்தவள் நாமம் விடாதோதும் பக்தர்
படுத்தயிடத் தில்பால் பழம்! *(74)*

## கிரேஸி மோகன்

*பழம்நழுவிப் பாலில் விழவைக்கும், மூப்புக்*
*கிழம்குழவி போலே குதிக்கும் - அழுகை*
*மிடிமை துயர்துன்பம் படர்கின்ற நேரம்*
*மடிதாங்கித் தேற்றுவாள் மா!* *(75)*

*மாகாளி சங்கரி மாதங்கி பார்வதி*
*ஆ,காலி மேய்ப்போன் அருந்தங்கை - மாகாளை*
*வாகன ஈசனார் பாகத் தமைவாளின்*
*மோகனச் சக்தியில் மூழ்கு!* *(76)*

*மூழ்கிக் குளித்தெழுந்து முப்புரி நூலகற்றிச்*
*சூழ்கலம் காவி கமண்டலம் - சூழ்ந்திட*
*சந்யாசம் கொண்டாலும் சத்தியத்தைச் சந்திக்க*
*பெண்வேஷ சக்தியைப் பேணு!* *(77)*

*பேணும் பொடுகும் புகுந்தபெண் கூந்தலை*
*வானத்து மேகமென்று வர்ணித்து - மானம்*
*தொலைத்துப் புணர்ந்து திளைத்தது போதும்*
*நிலைத்த பகவதியை நாடு!* *(88)*

*நாடியதும் தேடியதும் ஆடியதும் கூடியதும்*
*ஓடி ஒளிந்திடும் ஓய்ந்திடும் - ஆடிவரும்*
*வெள்ளியில் அம்பாளின் வெண்பொங்கல் வேகவைக்கும்*
*சுள்ளிக்கும் சொர்கச் சிறப்பு!* *(79)*

## முப்பெரும் தேவியர்

*சிறப்பவள் சக்தி சினமவள் யுக்தி*
*சுரப்பவள் பக்தி ஜகத்தில் - பிறப்பும்*
*இறப்புமவள் ஆட்சி இருப்பவள் மாட்சி*
*திறப்பாளே மோட்சத் திரை!* *(80)*

*திரைவிழுந்து கண்ணில் நரைபடர்ந் தில்லச்*
*சிறைகிடந்து வாழ்வாய் ஜடமாய் - தரைபடர்ந்து*
*பின்புசவம் ஆகாது பேரின்பம் பெற்றிட*
*அன்புசிவம் பாதி அணுகு!* *(81)*

*அணுகிட அன்னை, துணிகரத் தோழி*
*முனகிடத் தாதி, மறலி - முனைய*
*மனுகொடு நீயும் சினமொடு தாயுன்*
*வினைகெடப் பாய்வாள் வெகுண்டு!* *(82)*

*வெகுண்டெழும் சிங்கம் விரலசைத்துப் பக்தர்*
*புகன்றிடப் பூனையாய் போகும் - திகழ்ந்திடும்*
*பட்டர்க் கருள அமாவாசை ஆனாலும்*
*வட்டநிலா வானில் வரும்!* *(83)*

*கடிமணக்க னாக்கண்டாள் கோதை மகிழ*
*முடிந்தனை நாத்தனார் மூன்றாம் - முடிச்சைநீ*
*ஆதலால் ஆண்டாள் அவள்பாசு ரத்தில்*
*காதலாய்ப் பாடினாள் காண்!* *(84)*

## கிரேஸி மோகன்

நாவில் கலைமங்கை, மாவில் மலைமங்கை
காவில் அலைமங்கை, கள்ளூறும் - பாவிலோ
கோதை, வரம்தரும் காமதேனு, கற்பிலே
சீதையவள் மொத்தத்தில் சித்! (85)

சித்தா னவள்வேத வித்தா னவள்ஜீவன்
முத்தியில் சேர்த்திடும் மூலமவள் - பத்தியில்
பித்தா னவளிமய தத்தா னவளீசர்
சொத்தா னவள்பாதம் சேர்! (86)

சேற்றில் மலருமோ செந்தா மரைமுழுச்
சோற்றில் மறையுமோ பூசணி - தேற்றமாய்ப்
பாவியென் நெஞ்சையெப் பாடுபட் டேனும்நீ
கோயிலாய் செய்துள்ளே வா! (87)

காலை நனைத்திடும் நீலத் திரைகடல்
ஓலம் ஒலித்திட ஓங்காரம் - ஜாலமாய்ப்
பூக்கொத்து போல்நிற்கும் பூவை குமரியின்
மூக்குத்தி ஜோதியை மொய்! (88)

மொய்யெழுத வேண்டா மகமாயி உண்டியில்
மெய்யுருக வேம்பை மடிசுமந்து - கையழுந்தக்
கூப்பி அவள்கோயில் கோபுரத்தைக் கும்பிடக்
காப்பவள் தண்டைக் கழல்! (89)

## முப்பெரும் தேவியர்

அழலேந்தும் அம்மன் அவள்நம் துணையாய்க்
கழற்கால் உதைக்கஞ்சும் காலன் - கழலுதிர்க்கும்
தூளியுன் நெற்றி துலங்கவெண் நீறாகக்
காளியுன் ஆயுளுக்கும் காப்பு! *(90)*

காப்பாள் கருமாரி, கைகொடுப்பாள் கற்பகம்
கோப்பாள் இருவரையும் காளிகாம்பா - வார்ப்பாள்
இகமேமீ னாட்சி அகம்விசா லாட்சி
சுகம்காஞ்சி காமாட்சி சேர்ந்து! *(91)*

சேர்ந்து களித்தது சோர்ந்து தனித்தது
நேர்ந்திடா வாழ்வு நிலைத்திடச் - சார்ந்திரு
முண்டகக் கண்ணியின் மூலக் கருவறையில்
தொண்டர் குழாத்துடன் தோய்ந்து! *(92)*

தோய்ந்த தயிரைத் திருடிச் சகாக்களுடன்
மேய்ந்த மலையடியில் மல்லாந்து - சாய்ந்துண்போன்
செல்ல சகோதரியைக் கொல்லூர்மூ காம்பிகையை
உள்ளப் பசியாற உண்! *(93)*

உன்னை நினைக்கையில் உள்ளம் உருகணும்
என்னை மறந்துநான் ஏகாந்தம் - தன்னையே
கொள்ளவும் அன்னையே கூட்டாய் அரனுடன்
முள்ளெனுமென் நெஞ்சில் மலர்! *(94)*

## கிரேஸி மோகன்

மலரோ கனியோ இலையேல் இலையோ
புலரும் அதிகாலைப் போதில் - குளிரக்
குளித்தவள் பாதத்தில் கும்பிட்டுச் சேர்க்கக்
களித்தவள் காப்பாள் குலம்! *(95)*

குலம்தழைக்கும் வாழ்வில் வளம்கொழிக்கும் வாக்கில்
நலம்செழிக்கும் மேலோர்தம் நட்பு - பலம்தழைக்கும்
காமக் களமொழித்துக் காக்கும் லலிதையின்
நாம சஹஸ்ரம் நமக்கு! *(96)*

இருப்பாள் இருந்தும் இராதாள் இவளைக்
குறிப்பால் அறிதல் கடினம் - நெருப்பால்
ஜலத்தால் வளியால் நிலத்தால் வெளியால்
புலத்தால் உணராப் பரம்! *(97)*

தாயவள் தாலாட்டு தூங்கும் விழிப்புணர்வைப்
போயெழுப்பிப் பால்ஞானம் போட்டிடும் - தூயவளைக்
கொண்டோர்க்குச் சாவில்லை கூற்றுவன் பாசமவள்
தொண்டர்பதம் கண்டு தொழும்! *(98)*

பரசிவ வெள்ளம் பருகிட உள்ளம்
பரமஹம்ஸ பேரின்பம் புல்லும் - வரசவம்
கங்கையில் மந்திரம் கர்ணத்தை ஓதிட
தங்குபவ தாரிணித் தாய்! *(99)*

## முப்பெரும் தேவியர்

நமக்குத் தொழில் நதிகங்கை இந்து
சுமக்கும் சிவனிடம் சேர்ந்து - கமக்கும்
குழல்தாங்கும் சக்தி கமல பதத்தைத்
தொழல்!கூலி சும்மா இருப்பு! *(100)*

### நூற்பயன்

அன்னைபரா சக்தி அருள்வேண்டும் வெண்பாக்கள்
முன்னம் உரைத்தேன் ஒருநூறு - பின்னிவற்றை
ஓதித் தெளிவார் ஒளியுறச் சேர்ந்திடுவார்
மாதா பதத்தில் மகிழ்ந்து.



**என் அருமை நண்பா!**

**நகைச்சுவை என்ற பெருங்கடல் உன்னுள்**
**மிகையாய் அலையடிக்கக் கண்டேன் - உகந்துநான்**
**ஊற்றுகண் சற்றே திறந்துவிட்டேன் அவ்வளவே**
**ஆற்றுப் பெருக்காய் அருவியாய் - ஆற்றலொடு**
**பொங்கிப் புறப்பட்டாய் போதாதென் றேமேலும்**
**தங்குதடை இன்றித் தமிழ்கற்றாய் - இங்கிவனால்**
**நீவளர்ந்தாய் என்றால் இவனுமுன் நட்பாலே**
**தான்வளர்ந்தான் என்றால் மிகையில்லை - நாம்வளர்ந்த**
**பாதையொரு பொக்கிஷமே! பாரினிலே நம்நட்பின்**
**காதையொரு காவியமே காண்!**

**-சு.ரவி**